அந்தரதலத்தில்வந்துதிக்கின்றவந்திமாமதியமோர்கோடி, சுந்தரந்துதைந்துசுடர்விடும்வெய்ய சூரியரோரொருகோடி, வந்திடுஞ்சென்னிவளர்ந்தெழுந்தூய வடவையங்கனலொரு கோடி, தந்தவைதிரண்டொன்ருய்வளர்சோதிதருந்திருமே னியினெருபால. (கூ)

கழையுகுபாலுங்கண்டும்வார்தேனுங்கருங்குயிலிசையு மேழிசையுங் குழலினிசையுங்கோதிலாவமுதுங்குழைத்தி டுகுதலையந்தீஞ்சொற், பழமறைப்பொருளைப்பவளவாய்கொ ழிக்கும்பத்திசேர்கித்திலமுறுவ,லிழைதருமருங்குலேந்திளங் கொங்கையிமயமால்வரைமயிலிலங்க (க0)

விட்டெறிகின்றவெண்மதிக்குழாமும்வெய்யவாநேகரும் போல, மட்டறுவயிரமன்னுசெம்மணிசேர்மகுடநன்மாமுடி வயங்கக, கிட்டியேறுதலைக்கிழித்தெழும்விழித்தீக்கொழு ந்துவிட்டதுகிளர்ந்தோங்கக், கட்செவிப்பகுவாய்க்கடுவுமிழ ரவகங்கணமணிக்கதிர்பரப்ப. (கக)

முழங்கிவருதலைகளபுரண்டிடக்கரத்தான்முடித்தசெஞ் சடாமுடிக்கிடங்க, குழநதைவெண்மதியின்கோடுழக்குற்ற குளிர்புனற்குறுந்துளிசிதறச், சுழன்றுவீழ்நதிலைசகண்முர ன்றுறுவாசந்துதைந்துதாதாடியுண்மகிழ்ந்து, வழிந்தநறப்பசுந் தேன்வண்டினுங்கொன்றைவாசமெண்டிசாமுகம்வீச. (கஉ

காசினிபுகழுங்கலைதிகழ்மதிபோற்கருணைநற்றிருமுக ம்பொழியப், பூசும்வெண்ணீறும்பொருந்துமார்பகத்திற்பொ ங்குமாரங்கணின்றிலங்க, மாசறுசோதிவயிரகேயூரமன்னிய வாகுவின்வயங்க, வீசியகிரணவெம்படைக்கலங்கண்மேவிய கரங்களில்விளங்க. (கங

நினைவருஞ்சங்கக்குழைநிலவுமிழ்ந்துநீண்டவார்காத பூண்டெறிப்பக், கனைகடல்வயிறுகலங்கவன்றெழுந்தகடுவிட ங்கந்தரங்காட்டப், புனிதமாகியசெம்புள்ளிசேர்தருவெம்பெ ருப்புலித்தோலுடைபொலியப், பணகமர்முதரபந்தனமண கள்பரவரும்பாயிருள்பருக. (கச

தங்குமால்வரையிற்றகுமருவியெனச்சார்ந்தவுத்தரீயமோர் பிலங்க, வங்கையிலபயவனுமிகாங்குலியிலணிபவித்திரமழ கொழுகப், பங்கமுற்றிரைத்துப்பாய்திரைசுருட்டும்பரவை சூழ்பாரொலாமிடந்துஞ், செங்கண்மாலின்னுந்தேடரிதாயதி ருவடித்தாமரைதிகழ. (கரு)

சோதிசேர்வயிரத்தூணிரைநிறுவிச்சூழ்ந்தபொற்பித்தி கையமைத்து, மீதுசேர்பவளப்போதிகையிருத்திமிகுந்தந ன்மரகதந்தயங்கு, மோதுமுத்தாத்தோடுறுதுலாஞ்சேர்த்தி யொளிமணிகிளாதரவழுத்தித், தீதிலசந்திரகாந்தந்தரைப்படு த்துச்சித்திரமழகுறச்சேர்த்தி. (கசா)

விளங்குமண்டபத்தின்மேவியேகாப்பண்மிக்கால்லெழி லரிசுமந்த, வளர்ந்தெழுஞ்சோதிவழங்கிடக்குயிற்றுமாரிலா மணித்தவிசேறி, யளந்தறிவரியவருமறைப்பொருளாயானங் தமேதிருவுருவா, யிளம்பிறைமுடித்தவெம்பிரானமரர்தம்பி ரானினிதுவீற்றிருந்தான். (கஎ)

அந்தவேலையினினந்தியெம்பெருமானங்கையிற்பிரம்பி னைக்கொண்டே, வந்தவண்மிடைந்தவானவர்முனிவாதம்மை நேர்வரன்முறைசேர்த்தி, யந்தமிலவுணாதங்களைக்கொண் டேயணிபெறநிறுவியேயொருபாற், சிந்தையின்மகிழ்கூர்ந் தெந்தைதன்றிருமுன்றிரிந்துநல்லருந்துதிசெய்ய. (கஅ)

அரம்பைமேனகையூர்வசியழகொழுகுமரியசீர்த்திலோ த்தமைமுதல, வரம்பெறுமுயர்வான்மகளிர்மந்திரஞ்சேர்மத் திமைதாரகமரபிற், றிரம்பெறவெழுதுசித்திரமென்னத்திக ழ்ந்துசெம்பவளவாய்திறந்து, நரம்புறுவீணைநன்மூலைதாங்கி நாதகீதத்துடனடித்தார். (கசு)

கீதநுங்கின்றதேவமாபாதஞ்சித்திரசேனனோடுலக மோதிடுமந்தவுருப்பசிநடித்தேயுற்றிடுநாதகீதஞ்சேர் வேதமேறுகருமிக்கான்செவிக்குவீணையேயிசைவிருந்தளிப்ப மாதினையணைந்துவாமபாகங்கொள்வான்வன்றிருவுளமகிழ்ந்தான்.

நானிலத்துயிர்களனைத்துயர்கதிபெறுவானுன்முகன்வரங்கினேர் தேயோ, வானகஞ்சுழலவருங்கொடுஞ்சண்டமாருதம்வத்த வைபுகுந்தே, யூனநீங்கியவவ்வுருப்பசிமருங்குலுடுத்தவொ ண்டுகிவினைநீக்கா, வானகாலையினிலாயிடைவெருவியனைவ ருமவகிதரானர். (உக)

உறுபெருங்காதலுள்ளமீக்கொள்ளவோங்குபேரொழினலந்தாங்கு, முறையறுகன்னன்மூரிவிற்காமன்முடுகினன்மல ர்க்கணைதொடுப்பக், கறையணமகொடியகட்செவிபபாந்தட் கணபணுடையவளலகுற், குறியிடநானனோக்கினன்கமல க்கோயில்விற்றிருந்திடுநர்சில. (உஉ)

ஆங்கதுகாணூஉவளவிலெண்டத்துமகண்டிதமாயசஞ்ச லமா, யோங்குபேரொளியாயுயிர்க்குயிராகிபுனனுமுனனுண ர்ந்திடுமொருவ, னீர்காரமபானீயெனவேலாடுநிலமிசைவீழ்ந தடிபணியப, பாங்குறுநடிபணியினுலெழவபரஞ்சுடர்பங கயற்குண்ாபபான். (உங)

உருப்பசியெனுமபேரொணொடியிவடனுைப்பருமூ ருமூலத்தில், விருபபுடனின்கண்பாபபினையதனைமிக்கான சபைவிடப்பணித்தாங், திருத்தருமெமதுதெய்வசற்சபையிற றிருகியசிந்தனையதனைப், பொருகதெனநினைந்தபுந்தியிலாதா ய்புகல்வதொன்றுண்டதுகேண்மோ. (உச)

அரனருட்குரவனங்கிசேர்தலத்திலாகமவேதமோதிடத தி, ஞெருமைசேருள்ளத்துணர்வினிற்றூங்குமோங்குநல்லு றுவர்களிடத்து, மருமலர்க்குழலார்வனப்பினைநாடிமயங்கு வார்யாவரேயெனினு, மிருடருநரகரிவர்பெரியோராகெ டப்படுவரெஞ்ஞான்றும். (உரு)

இத்தகைமையினுனிற்புறம்பாகவிசைத்தனமீங்குநீயெ ம்பால், வைத்தபோன்பின்மகிழ்ந்தனமின்னேமனத்திடைம தித்திகன்மைந்த, புத்திநூருவக்காற்பொருந்துகப்பிசின்காழ் லேபுரிந்திடின்மாதோ, வக்தருகனத்திலடைந்தவத்தோ கன்றிடுமஞ்சனீயஞ்சல். (உசு

இன்னமுதங்கான்றிருட்குறுமபெறியுமிந்துவின்மரபி னில்வந்த, பன்னுசெநதமிழ்த்தென்பாணடிநன்னாட்டிற்பயின் றிடும்பதிபலவுளவா, மன்னதினிமேலாயறைநதிடுங்கூடலால வாய்ப்பதிக்குயோசனையின், மனனிடும்வன்னிதிக்கிஞேரகல மபூவணமெனுமணிதிகழ்நகரம். (உஎ)

உரைசெயுமந்தவோங்கெயின்முதூரோரொருமுவல கேத்த, மருவிடுமதன்கணமத்திமையயங்குவாவிமுகடணவு வண்பணைசூழ், பாவரும்பாரிசாதமொன்றுண்டபபாரைமா மாத்திருநீழற், புரிகுழலுமைமுன்புரிதருசெயலாற்பூசைசெ யிலிங்கமொன்றுண்டால். (உஅ)

அச்சிவலிங்கமருள்வடிவாகியாம்பிலத்தலத்தினின்றளி சேர், முச்சகம்புகழமுளேத்திடுமூவாமுதலுமாய்முழுதுலகி றைஞ்ச, நிச்சயப்பொருளாய்நிமலமாயநிறைநதுநிகழ்ந்துநங் கண்மணிவடிவாய்ப், பச்சைமாமயிலோர்பாதிநின்றிலங்கப்ப ம்பொருளாகியேவிளஙகும. (உகூ)

ஆதலாலரியவச்சிவலிங்கத்தன்பினுயிரஞ்சனூர்யுகங்கள், தலமதனிற் பொருந்தியாஙகெமமைப்பொற்புடன்பூசனைபு பி, னீதியின்யாமுநிகழ்ந்துமுன்ரூன்றிநினக்கருள்புரிகு மென்று, வோதிநீபோதிமாதொடுமென்றுனுயிர்க்குயிரா யவொருவன். (௩0)

அன்னகாலையினிலன்னவாகனனுமஞ்சியேயஞ்சலிசெ து, முன்னைநாளிழைத்தமுதிர்வினைவந்துமூண்டிடும்விதியி வென்னைப், பன்னுநாமகன்றபரிசனஞ்சூழப்பதங்களிற்படி தெழுந்தன்பாற், பொன்னலர்கடுக்கைப்புரிசடைப்பிரானை போற்றினன்விடைகொடுபோந்தான். (௩க)

பன்னகாபரணப்பரஞ்சுடராயபண்ணவன்பண்ணவர்தம நக், தன்னிகர்தத்தம்பதியிடைச்செல்வான்றக்கவிடை டுத்தருளி, மன்னியநந்திவானவன்கோயின்மணிக்கடை யின்முன்காப்ப, மின்னிசாமருங்குன்மெல்லியலோடும் ள்ளிமால்வளாயில்வீற்றிருந்தான். (௩உ)

வேறு.

சுந்தரமேனிதுளங்கனல்கொண்ட
வந்திவணத்தனநுக்கிரகத்தாற்
புந்திமகிழ்ந்துயர்புட்பவனத்திற்
கநதமலாக்கடவுள்கடிதுற்றான். (௩௩)

பண்டருவேதபராயணர்மேவுந்
தண்டலைசூழ்பனசாலைகளுமபொற
புண்டரிகந்திகழ்பூந்தடமியாவுங்
கண்டனனெணடருகண்கள்களித்தான். (௩௪)

ஓசைகொளந்தவுருபபசிதன்மே
லாசையளித்தவருமபவரீபபான்
றேசுமிகுநததொர்தெய்விகலிஙகம்
பூசைசெயுமபடிபுநதிநினைந்தான். (௩௫)

நாமகள்சேர்தருநான்முகனன்காற்
பூமகள்போற்றிசெய்பொற்கொடிமுன்னர்க்
காமியமிக்கருள்கங்கைகலநத
மாமணிகன்னிகைவந்துபடிந்தான். (௩௬)

வாய்மொழியொன்றுமவழுஙகலனுகி
யாய்மலர்கொண்டுநலங்கணன்வைகுங்
கோயினனவாயிலகொளுங்குணதிக்கிற்
றூய்மையுடன்சதுரங்கமவகுத்து (௩௭)

தன்கைதரித்ததொர்தண்டதுகொண்டே
யன்பொடுகெல்வினனங்கைகள்செய்யு
நன்குறுதீர்த்தயெப்பொடுகண்டே
பொன்பயிலுந்திருக்கோயில்புகுந்தான். (௩௮)

காருலவுந்திகழ்கற்பகநீழற்
சேர்தருகின்றதொர்தெய்விகலிங்க
நேர்விழிகாண்டலுநேரின்மெய்ஞ்ஞான
வாரிபடிந்துமயங்கினன்மாதோ. (௩௯)

அண்டமடங்கலுமன்னமதாகித்
தின்டிறலானவிதேடியுமாரின

பண்டறியாதபரஞ்சுடர்தன்னைக்
கண்டனனென்றுகளித்தனனம்மா. (சo)

பூருவமாயருள்பொங்குமிலிங்கத்
தேருறுமின்புருவத்திலிருத்தி
நேரில்கொடுமைபவநீக்கிடுகிற்பா
ஞரணபூசனைசெய்தனனன்பால். (சக)

சோடசபூசைதொடங்கிமுடித்தே
பாடலொடாடல்பயின்றறமங்கை
தாடனிலேவழிபாடதுசெய்வா
ஞடிவருந்தினஞனிலமெலலாம். (சஉ)

மன்றவனந்துளவோன்மலருந்தி
யன்றுபிறந்தருளனனமுயாதோ
யொன்றுநலவாய்மையுரைப்பதுகேட்டி
யென்றசொல்வானினெழுநதைையன்றே. (சங)

நன்மலேயீன்றருளுயகிமேனுண்
முன்னவன்வாய்மைமொழிந்திடுமாறருற்
றன்னுறுமின்னறணந்திடவிங்ஙன
மன்னுதவம்புரிகின்றனண்மாதோ. (சச)

புல்லுமரன்கழல்பூசைசெய்தமபோன
வல்லிமணற்கணமறைந்துறைகின்ற
ளொல்லையினீக்கியுஞற்றுதிபூசை
செல்வநலெண்டிகழ்சித்திகளுண்டாம். (சரு)

செந்தழன்மாதவர்செப்பியசாப
நந்திடவெந்தையைநாயகியோடும்
புந்திமகிழ்ந்துசெய்பூசனையாலே
யிந்திரைதன்னையியைந்தனன்மாயோன். (சசு)

ஆதலினின்னயாராதமுமிந்த
நாதனருச்சனையாலதுநந்துஞ்
சோதியும்வந்துநினக்கெதிர்தோன்றும்
போதுதியென்றதுபேசியதேயன்றே. (சஎ)

அன்னதுளங்கொடானருளாலே
மன்னியபொற்கொடிமாதைமறைத்த
நன்மணலுக்கிடைநாடருஞானப்
பொன்னுறுபூங்கொடிபோலெதிர்நின்றாள். (ச

வெளிப்படுகின்றபொன்மின்னனையாளை
யளப்பரிதாகியவன்பொடுகண்டு
களித்தனனீள்கருணைக்கடல்சென்று
குளித்தனனின்பொடுகூடினனன்றே. (ச

சொற்றரிதாயசுகோதயநல்கும்
வெற்றிதருமகதிாவீசுமெய்ஞ்ஞான
பொற்கொடியைப்புகழ்புந்திநினைந்தே
யற்புதமெய்தியருச்சனைசெய்தான். (ரு

ஓதருமோங்கொளியுற்றதொர்பாரி
சாதமதின்னிழற்சாதரலாலவெம்
பேதகநீக்குநர்பொறபுறுபாரி
சாதவனேசனெனப்பெயர்சாற்றும. (ரு

பூவுல்கம்புகழ்பொற்புறுமோகை
மேவியரூபம்விளங்குதலாலே
பூவுலகந்திகழ்பொற்கொடியென்று
மேவியநாமம்விளம்பியதன்றே. (ரு

பொன்னுலகந்திகழ்பொன்னனையான்பான்
மன்னுசெவ்வானிடைவந்தொளிர்கின்ற
மின்னெனநின்றுவிளங்குதலாலே
மின்னனையென்றுவிளம்பினர்மேலோர். (ரு

நாடொறுமிம்முறைநல்லமுதஞ்சே
ரோடையினுந்தனதோடையினுஞ்சென்
றாடியருச்சனைக்காவலனேர்ண்டன்
பூடுருகச்சிவபூசையுமற்றே (ரு

கோலமதாமணிகுண்டனிருதி
மூலையினன்புளமூண்டுகலத்தோ

ராலகிழற்கணமைத்தொருலிங்க
நாலுமுகன்வழிபட்டனனன்றே. (ருரு)

அத்தருநீழலினண்ணலைநண்ணிச்
சித்தமகிழ்ச்சியுடன்றெரிசிக்கிற்
புத்திகொள்பூருவமாய்ப்புரிபிரம
கத்திபெண்வெவ்வினைக்கட்டறுமன்றே. (ருசா)

அன்னியமாமனையாளையணைத்த
தென்முறைபல்லதுதுய்த்திடுதோடரு
சென்மமொர்நூறுசெய்தீவினைநீரு
மன்னசனுற்பினரன்பநிசேரவார். (ருஎ)

சிற்சிலநாளவைசென்றெரிபபின்
புற்றருளொநதைக்குத்தாதிக்கி
னெற்றருமெண்டலையிட்டதொர்நூறு
விற்கிடையெலலையினவிண்டுவைககணடானு. (ருஅ)

கண்டகவனனவனைககைகுவித்தங்க
மண்டலில்வநிடுமவாயமைவழஙகி
யெண்டிசைபோறறிடவேய்நதிருவோரு
மண்டாபிரானகழலகண்டமர்நாளில. (ருகூ)

வேறு.

திருமிகுமுரோமசன்சிறந்தகௌதமன்
பாவுமாங்கீரசன்பரத்துவாசனெண்
டொபுகழ்வசிட்டனற்சனகனுதியர்
மருவினாயன்றனைவணங்கியேத்தினர். (சா௦)

ஆங்கவரனைவருமங்திவான்மதி
தாங்குசெம்பவளவார்சடிலசேகரன்
பூங்கழலருச்சனைபுரிந்துவைகலா
லோங்குமித்தலமயனுலகமொத்ததே. (சாக)

எம்மையாளிறைவனுக்கினியவாலயஞ்
செம்மைமிற்குயிற்றுவான்சிறந்ததெய்வதற்

கம்மியன்றனைவரக்கருதியாங்கொரு
மும்முறைறவிளித்தனன்முளரிவேந்தனே. (கூஉ)

அந்தநல்லுரைசெவியணைதீலோடும்வந்
தெந்தைநீவிளித்ததென்னியம்புகென்றலுஞ்
சுந்தரவரியளிதுதைந்துதேனுகர்
கந்தமாமலருறைகடவுள்கூறுவான். (கூஙு)

காவிசேருந்தடங்கட்படாமுலைத்
தேவியோர்பங்குறைதெய்வநாயகன்
மேவியாருயிர்க்கெலாம்வீடுநல்குவான்
கோவினீயணிபெறகருயிற்றுகென்னவே. (கூச)

அருடருமரியபஞ்சாக்கரப்பெருந்
திருமதிலாலயஞ்சிகரமண்டபங்
குருமணிதயங்குநீள்கோபுரங்கள்சீர்ப்
பரமனுடகநதினம்பயிலுமண்டபம். (கூரு)

கரிமுகன்கந்தவேள்கருணையேபொழி
திருமுகமண்டலஞ்சிறநதிலங்கவான்
பெருகொளிபரப்பிடும்பிரமதாண்டவ
மருள்புரிதரவெழுந்தருளுநாயகன். (கூகா)

இன்னநல்விக்கிரகங்களெண்டிசை
துன்னுசெங்கதிரொளிதுதைந்திலங்குசீர்ப்
பன்னருநவமணிபயின்றுபைம்பொனீள்
பொன்னணிமகுடவான்பொருந்துமண்டபம். (கூஎ)

மன்னுதேருர்மணிமறுகுதோறுநீள்
பன்னுமெண்ணெண்கலைபயிலுமண்டப
மன்னமன்னவர்நடமாடுமண்டபந்
தன்னிகர்தரவருதானமண்டபம். (கூஅ)

கந்தனவனங்களுநறியபொய்கையுங்
கொந்துலாவுங்குயில்கூவுஞ்சோலையு
மந்தணர்மனைகளுமன்னசாலையுஞ்
சந்தமிம்முறைதயங்கக்கண்டனன். (கூகூ)

கண்டபின்றன துளங்களித்துக்கம்மிய
னண்டநாயகன்றனக்கணிகொளாலய
மெண்டொகைபெறவிளிதியற்றினேனெனாப்
புண்டரீகன்பதம்போற்றிபபோயினான். (எ௦)

போயபினுடனெழீஇப்புண்டரீகனற
றுயினுமுயிர்க்கருடம்பிரான்றிருக்
கோயிலகளியாவையுங்குறித்துளங்கொளா
வேயவெண்கண்களாலினிதுகண்டனன். (எக)

வன்னியோராநதுமுன்வளர்த்துநேர்வளி
தன்னையுள்ளடக்கியைம்புலன்கடாங்கியே
பொன்னனையானடிப்பூசைசெய்துபி
னுன்னருமபரசிவயோகுற்றனரோ. (எஉ)

பாவமானவையெலாம்பற்றறுத்துமே
லாவமாணவையெலாமாகமப்படி
மாபரன்வடிவமாய்வயஙகவாங்கவை
தாபனஞ்செய்தனன்சதுர்முகப்பிரான். (எங)

தேனலர்கொன்றையஞ்சிகழிவானவன்
றானருள்செய்தநாட்டணநதுமாண்டதும்
பான்மைசேர்சத்திநிபாதமுற்றது
ஞானநாயகன்றிருவுளத்துநாடினான். (எச)

இன்னநற்றவங்கள்கண்டிரங்கியெம்பிரான்
பன்னகபணமணிப்பணிகடாங்கியே
மன்னும்வானவர்கள்பூமழைபொழிந்திட
மின்னனையாளுடன்விடையிற்றோன்றினான். (எரு)

தோன்றலும்விழித்துமெய்துணுக்கமுற்றமீ
வான்றொடுபெராமாமரந்தன்வேரறத்
தான்றனாவீழ்வபோற்சதுர்முகன்கதிர்
கான்றிடுங்கண்ணுதல்கழலிறைஞ்சினான். (எசு)

இறைஞ்சிடுமயன்றனையெழுகெனுவெழூஉத்
தவிந்தடியேன்பிழைத்தவற்றைநீக்குவான்

வெறுந்தமியேன்முனம்வெளிநின்றுயெனுச்
சிறந்தநன்மறைத்துதிசெப்பலுற்றனன். (எஎ)

வேறு.

ஈசாசரணமெந்தாய்சரண
நேசாசரணநிமலாசரண
மாசானவைதீர்த்தடியார்க்கருளுந
தேசாசரணஞ்சிவனேசரணம. (எஅ)

மூவாமுடியாமுதலேசரண
மேவாதவர்பானமேவாய்சரணங்
காவாயெனவேகடனுஞ்சயிலுந்
தேவாதியர்தந்தேவேசரணம. (எகூ)

அகிலந்தருகாரணனேசரணம்
புகலும்புவனாதிபனேசரண
மகிழ்மனமதவேண்மாணடேயெரியத்
திகழ்வெங்கணனேசிவனேசரணம. (அ0)

உலகெங்கணுமோருருவாசரண
மலர்செங்கதிரோனதிதாகமுடன்
வலம்வநதுழலுமமகமேருவெனுஞ்
சிலைதங்கியகைச்சிவனேசரணம. (அக)

உலகாதரநலலொருவாசரண
மலமாயைகளைந்தருள்வாய்சரண
மலையாழியின்மேவமுதாசரணந்
திலகாபரணாசிவனேசரணம். (அஉ)

வேறு.

இன்னபன்னியேயெம்பிரான்திரு
முன்னர்மாணவன்முறையினேத்தியே
சென்னிமீதினிற்சேர்த்தகைகளையா
ணன்னவாகனனைறதன்மெயினுள். (அங)

பூருவத்தியானபுரிதைபாகநக
திருமாறருள்செய்துதிநிலைச்

சோர்விலாதசாத்துவிகர்க்குண
நேரிலென்பதநீயளித்தரோ. (அச)

இந்தநற்பதியெம்பிராட்டிதன
முந்தைநாமத்தான்மொழிந்ததாயினு
மெந்தையோருகமென்றுரைத்தாற
றந்திடும்வரந்தருதலவேண்டுமால். (அரு)

என்றருளுனையிழைத்தபூசனை
நனற நாகமொழுமவாமுநல ருவா
யொன்றுமித்தலத்துறைபவாகளெலாங
கன்றுபாதகங்கழிதலவேண்டுமால (அசா)

இரதவீதியாளினிதியறநினை
திருவுளமமகிழச்செய்யவேண்டுமார
பரவுபனனகாபரணநீயெனுக
கருணையங்கடலகருணைசெய்குவாய. (அஎ)

கநகமேவுநறகமலபோதிகேண்
முந்தைநாண்முடனமுதவிடபாசக
நநதுகின்றதானனகினீநவி
லநதநல்வரமவையளித்தனம. (அஅ)

வித்தகந்தருவெள்ளைமேனியாள
சத்தமாதவத்தலைவர்சூழநீ
பத்தியோடுகினபதத்திலேகெனு
வத்தனந்தலிங்கத்தமாநதனன. (அகூ)

அத்தனங்கலிங்கத்தமர்ந்தபின்
பத்தியாலயன்படியிற்றாழ்ந்தெழீஇ
வித்தகந்தருவிழாநடத்தியே
சத்தியவ்வுலகத்திற்சார்ந்தனன். (கூ0)

மன்னுபிரமகைவர்த்தன்னினற்
பொன்னுலாவுதென்பூவணக்கதை
யின்னதேழ்தலையிட்டவெழுபதாய்ப்
பன்னும்த்தியாயம்பகர்ந்திடில். (கூக)

வேறு.

பிரமசாபமகற்றிடுமிக்கதைபெருகுகாதலினித்தமுமோ
துவோர், ருரியஞானவுரைப்பொருள்செப்பினரொருமையோ
டுசெவிகொடுத்தோர்குவோர், கருணையால்வரைகுற்றநர்கற்
குநர்கழறுகாதைகருததினிடுவோர், மருவிநீடுசுவர்க்கமது
ற்றரமகளிர்சூழவிருப்பரொந்நாளுமே. (கூ௨)

பிரமசாபமோசனச்சருக்கமுற்றியது.

ஆகச்செய்யுள் (எஅச)



## பிரமசாபமோசனச்சருக்கச்சுருக்கவசனம்.

திருக்கைலாசமலையிலே, செம்பொன்னாலாகிய திருமண்டபத்தி லே, அரிபிரமேந்திராதி தேவர்முதலியோர்சூழத் திவ்வியசிங்காசனத் திலே, உமாதேவியார்சமேதராக ஸ்ரீகண்டசரீரியாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளினர். அப்பொழுது, திருநந்திதேவர் வேத்திரப்படையி னாலே அவ்விடத்திலெநெருங்கிய தேவர் முநிவர்குழாங்களை ஒதுக் கிச் சந்நிதியிலே உலாவிநின்று துதிசெய்ய, அரம்பை மேனகை ஊர் வசி திலோத்தமைமுதலிய தேவரம்பையர்கள் வீணகானத்தொடுநடித் தார்கள்; அம்மகளிருள்ளே ஊர்வசி தனியே நடித்தபொழுது சிவ பிரான் திருவுளமகிழ்ந்தருளினர். அப்போழ்து ஊர்வசி இடையிலே யுடுத்த வஸ்திரத்தைப் பெருங்காற்றுவந்து சற்றே ஒதுக்கியபோது மற்றையோரெல்லாம் பெரிதும் அஞ்சித்தலைகவிழ்ந்தனர். பிரமனொரு வனே இரகசியஸ்தானத்தைக் காமமேலீட்டால் உற்றுநோக்கினன். அதனையுணர்ந்த சிவபிரான், நமது சந்நிதியிலே நிற்றற்கு நீ அருகன் அல்லனெனப் பிரமனைநோக்கிவிலக்கியபோது, அப்பிரமன் கீழேவிழு ந்து பெரிதும்பணிந்து எழுந்துநின்றனன். அப்போது, சிவபிரான் "நமது சந்நிதியிலும் ஆசாரியன் அக்கினி வேதாகமங்களோதுமிடம் நமதருளை நாடிக்கொண்டிருக்கும் பெரியோர் இவ்விடங்களிலும் மக ளிர் அழகைக்கண்டு மயங்குவோன், நரகவாசியாவன்" என்றும், அங் ஙனமாயினும் நீ நம்மாட்டுவைத்த அன்பினால் மகிழ்ந்தோம். இவ்விட த்தே நீ செய்த அபராதமானது நமதருட்குறியைப்பூசித்தால் நீங்குமெ ன்றும், பூமியிலே செந்தமிழ்ப்பாண்டிநாட்டிலே, திருவாலவாய்க்ஷேத் திரத்துக்குச் சமீபத்துள்ள திருப்பூவணத்திலே, நம்முடைய தேவியி னாலே பூசிக்கப்பட்ட மகாலிங்கத்தை நீ பூசித்தால், அங்கே தோன்றி

உனக்குக் கருணைபுரிவோம் என்றும் திருவாய்மலர்ந்தருளினர். அருளியவுடன் சிவபிரான்மாட்டுப் பிரமன்விடைபெற்றுத் திருப்பூவணஞ்சேர்ந்து, மணிகன்னிகைத்தீர்த்தத்திலேமூழ்கி, சுவாமிசந்நிதிக்கு நேரிலே ஒருதீர்த்தமுண்டாக்கித் திருக்கோயிலினுள்ளே போய்ச் சிவலிங்கப்பெருமானை விதிப்படி அருச்சித்துப் பின்பு தேவியாரையும்பூஜித்து அப்பால் மணிகுண்டதீர்த்தத்துக்கு நிருதிமூலையிலே ஆலநிழலின்கண்ணே தன்பேராலே ஒரு சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்தான். பின்னர்ச் சுவாமிசந்நிதிக்கு வடதிசையிலே நூற்றெட்டுவிற்கிடைத்தூரத்திலே தவஞ்செய்துகொண்டிருந்த விஷ்ணுவைக்கண்டு வணங்கி, தான் பூமியில்வந்த வரலாற்றைக்கூறிக் கலந்திருக்குங்கால், பிரமன் தேவகம்மியனைவருவித்துப் புட்பவனேசருக்கு ஆலயம் அமைக்கும்படிசொல்ல, தேவகம்மியன் சிற்பநூலின்படி திருக்கோயில் அமைத்தான். அமைத்தபின் திருக்கோயிலினுள்ளே பிரமன்புகுந்து சிவலிங்கத்தைப்பூசித்துச் சிவயோகத்திலிருந்தான். அதனையுணர்ந்த சிவபிரான் இடபாரூடராகத்தோன்றியருள, உடனேபிரமன் எழுந்து வணங்கித் துதித்தான். அத்துதிக்குச் சிவபிரான்மகிழ்ந்து பிரமன்செய்த பாவத்தையும்போக்கிப் பூவணத்து வசிப்பவர்க்கும் பாவந்தீரும்படி அருளி அந்தர்த்தானமாயினர். பின்பு பிரமனுந் திருவிழாநடாத்திச் சத்தியலோகஞ்சார்ந்தான். இங்ஙனம் பிரமகைவர்த்தபுராணத்திலே எழுபத்தேழாமத்தியாயத்திலே கூறப்படும்.

திருச்சிற்றம்பலம்.

---

பத்தாவது

## இலக்குமிசாபமோசனச்சருக்கம்.



பான்மைசேருலகம்பரிந்துகாத்தளிக்கும்பகவனும்பட
ர்சிறையளிசெந், தேன்விருந்துணுஞ்செய்யபூங்கோயிற்றி
ருவுமீங்குற்றதென்னெனலு, ஞானமறைதினமுநாவிளையா
டேற்சவுனகமுனிகேளென், றூனமலர்ந்தேயருந்தவத்து
றைபோமழகியசூதன்பின்மொழிவான். (௧)

மூன்றெனாவுலகமுமிருள்விழுங்குமழுமணிக்கிரண
[illegible]தருசெம், பொன்னிணுற்கணமைத்தபித்திகைதொறு
[illegible]பொங்கொளிபுதுவெயிலெறிப்பத், துன்னிணியெண்டிசையு

ஞ்சுடர்விடுசிகரச்சோதிவான்முகடுபோழ்ந்தவிரு, மன்னும
ண்டபத்தின்மத்தியின்முடங்குவாலுளைமடங்கலாசனத்தில்.

தலைமைசேர்மகுடந்தட்முடிதயங்கச்சங்குசக்கரங்கை
நின்றிலங்க, வுலகிருளோடவிலகொளிபரப்புமொருமணிகெ
ந்துமார்பொளிரப், பலகதிரவிர்பொற்படாமரைவயங்கப்படி
மிசையளந்ததாள்விளங்க, மலர்மகளோடுமரகதமலைபோல
வைகினனவைகுண்டமூர்த்தி. (௩)

மாறினமுக்கோடிமருவியவேலைவைகுமவைகுண்டலோ
கத்தி, னேறியசெங்கையிலங்கியசங்குமெரிசுடராழியுமேந
து, நூறொருகோடிநாரணர்சூழ்ந்து நணங்கியகேள்வியினவ
ணங்கி, வேறுவேறுயமிகநற்றுதியினவிருமபியாங்கவரவா
விளமப. (௪)

விலலுமிழ்மாலைமிகக்கந்திரிசோவீணைநலவிசைசையா
பாட, நலெழிலரம்பைமெலலியலார்களுட்டியமினறுமுன
னடிபபச், சொலவிடுநதடகைகசுமநதிடுஞ்சூரறறுளஙகுகஞசு
கியாகடுதிபபப, பல்லியநதுவைபபபபண்டருவேதபராயணா
பணிநதுமுன்பரவ. (௫)

அந்தநற்சமயமணடபமதனிலளிகுலங்களிக்கும்வண்
பொகுடடுக், கநதமாமலரிலவநதுதிககின்றகடவுளர்பதின்ம
ருமோரோழ், மந்திரகோடிநா தருமவயிரவசசிரத்தடகைகவா
ள்றருநே, ரிந்திரனிமையோரியாவருமீண்டியிருமருஙகிறை
ஞ்சிநின்றேத்த. (௬)

திருமலர்ப்பொகுட்டுச்செய்யபீடிகையிற்றிசைமுகன்
வரவருள்புரிந்தா, னருமறைமுநிவர்க்கமுதநற்கிரணவுழுகொ
மூகானனமலர்ந்தான், மருவியகுலிசவானவன்றனக்குமணி
முடிதுளக்கினனேனைக், கரிலதாயகடவுளர்தமக்குக்காண்
டகுகடைக்கணேக்களித்தான். (எ

பங்கயத்தவன்மேற்பார்வையக்கிருத்திப்படைத்திடு
தொழிலைவளனும், புங்கநற்சரபூபதிபுகழ்கிளைதுதுயபொ
நற்றிலையெனவு, னிங்கெமக்குணர்த்தியெனுமொழிகைத்த

ங்கெண்ணரும்பண்ணவர்நீவிர், நுங்கடம்பணியுநும்வரன் முறையுநுவலுமென்றனனுனிதநுணாவோன். (அ)

வேதநான்முகனேயாதிவிண்ணவர்கண்மேகவண்ணன் கழலிறைஞ்சி, யோதுநின்னருளாலுற்றவெம்பதங்கட்கோ ரொருகுறையுமோவின்றாற், றுதையுநதாயுந்தானருள்புரிய த்தநயர்கடளாவரோவெனளுப, பாததாமரையின்முறைமு றைதொழுதுபரிநதுமுன்பாவமேயினரால். (கூ)

வனமிகுசிகரமந்தரகிரியைமத்தெனநிறுவியோர்தாம்பா ப், பனகநற்றுக்திப்பணுமணிபிதுங்கப்பிணித்துநற்கச்சபவு ருவாய்க், கனைகடல்வயிறுகலங்கிடக்கடைநதுகடவுளர்க்க முதுநன்களித்த, தினகரனெனவேசெஞ்சுடர்பரப்புந்திருமி குமொருமணிமார்பா. (கo)

திகழ்தருநாரசிங்கமதாகிச்செம்பொன்மேனியன்றனை புகிராற், புகழ்பெறமார்புகீண்டணிவாகைபுனைதிருக்கரவா ரிந்த, விகழ்தலிலிருகோட்டேனமதாகியேழ்நிலமேந்தியவெ ந்தாய், சுகமிகவுயிர்க்குத்துணிந்தருள்புரியுந்தொல்லருட்சோ லொனவனே. (கக)

உறுதினமுலர்ந்தவுகாந்தகாலத்திலுததிகளேழுமொன் றாகி, மறுகுறக்கண்டுமென்னுயிரகிராங்கிமாற்றருந்திருவுருமா றி, யறைவரிதாயதிறலுடனேங்கியஞ்சலென்றுங்கொாசெ ந்சேலாய்ச், சிறுசெலுப்புனையிறசிநதுவேழடக்குந்தீதறுதி ழ்சதுர்வேதா. (கஉ)

[illegible]ணியவுலகில்வயப்பரியாகிவருங்கருணுகாமூர்த்தி [illegible]ணிகராயசதுர்மறைவிளக்கந்திடவந்ததம்பிரானே [illegible]ல்லன்பர்பவந்தனைச்சாடிப்பரிவினுண்டருள்புரிபரம [illegible]ட்டருள்கருணைநீர்பொழிநீண்டமாமுகிலே. ()

[illegible]வுருவமாகிமாவலியைவன்சிறைவைத்திடும்வள் [illegible]பூமண்ணாவாரளிகொண்டுபூங்கழல்பூட்டியேயுலகெலாங் [illegible]த்தக்கண்[illegible]மலர்வண்ண, [illegible]யுன்னிலங்கியல்கோளிலாகின்மலமூர்த்தி. (கச)

ஒருபடியண்டமுண்டதையன்றியோரடியாலுலகளந்
தோய், கருமுகிலென்னவேகண்படுத்தருளுங்கட்செவிக்கணைப
ணைடவியின், பருமணியெறிக்கும்பயோததிநாப்பட்பன்ன
கப்பாயனீத்தயோத்தித், திருநகருலகமருள்செயவநததீகறு
சீதரமூர்த்தீ. (௧௫)

விசிதரயகறங்குவேலைசூழுஞாலமேவியபொதுக்கடிந
தருளுந், தசரதன்மதலையாகவநதிராமசந்திரனெனும்பெயர்
தாங்கி, வசையறுதவத்துக்கவுசிகன்பின்போய்மன்னுதாட
கையுயிர்வாங்கித், திசைதொறுமுரியவிசைநிறுவியமெய்திக
ழ்ந்திடுந்திருமறுமார்பா. (௧௬)

காதலிற்றவஙகூர்கவுசிகன்வேள்விகாத்தெதிர்சுவாகுயிர்
பதைப்ப, மேதினிப்படுததிவிலசரிதாமைம்புலப்பகைவென்
றருண்மேலாங், கோதிலாகுணகுன்றனையகோதமன்சொல்
கொடியிடைகொடியகற்சாபம், பாதநுண்டுகளாற்படவுரு
வளித்தபாதபஞ்சாயுதநாதா. (௧௭)

வனமிகுந்தோங்குவரிசிலைகுனித்துவான்முகடதிர்தர
முரித்துச், சனகர்கோன்றந்தசானகியின்றன்றனிமணமிதிலை
யில்வேட்டுப், பனகாற்றுத்திப்பணமுடிகிடந்தபடிநடுங்கிடப்
பரசுராமன், றனதுவிற்குனித்தவனமிகுமலர்செந்தாமரைத
தடக்கைநாயகனே. (௧௮)

மன்னியவசிட்டமாமுனிசெம்பொன்மணிமுடிகவித்தி
டும்வேலை, பன்னுகைகேசிபண்டுகொள்வரத்தாற்பரவருந்தா
தைசொற்றவறு, தன்னமன்னவளோடரியதம்பியுடனணை
ந்துநற்குகனைநண்புவந்து, பொன்னுலகேத்தத்தன்னிகர்வன
த்திற்போதுபொற்பாதபுண்டரீகா. (௧௯)

அனைத்துபின்கானத்தணைந்தவான்றன்னைத்தக்கர்தியக்கடன்
முறைநயாற்றிப், பணிந்துபின்சென்றபரதனுக்குரியபரிவுடன்
பாதுகையுதவி, வணங்கு[illegible]பங்கனுக்குயர்[illegible]
படைவிளித்துவிராதனை, [illegible]
கற்றுங்கியபூந்தடக்கோளாய். (௨௦)

மாற்றருஞ்சடாயுவுடன்மகிழ்கூர்ந்துமாயமாரீசனைவதை
த்துக், கூற்றெனவந்தச்சானகிதன்னைக்கொடியராவணன்
கொடுபோத, வேற்றமர்பொருகேயிறந்தபின்றந்தைக்கிறு
செய்கடனிழைத்தளவி, லாற்றல்சோகவந்தனுருயிர்கொண்
டவலைகட்லச்சுதானந்தா. (உக)

தராதலத்தொடுவான்றடவிடுமெருத்தாத்தந்தருண்மைந்
தனைக்கண்டு, பராவருகிரணபபரிதிசெய்கமலபபதமபணிந்
தேத்தவேழ்பாரானை, மராமரமுருவவாளிதொட்டுலையாவாலி
மெய்பதைத்திடவதைத்த, வராவணைமீதினுழியினுப்பனுநக
தத்தமிதுயிலமர்வோய். (உஉ)

வானரசேனைதன்றொடுமேகிமறிதிரைக்கடற்கரைகட்டி,
யீனமின்மேன்மைவிபீடண னன்பினேய்ந்திடவிலங்கையை
யீந்து, தானவாகிளையைவேரொடுந்தடிந்துதசமுகனறன்சிர
மரிந்தாங், கானசானகிதன்சிறைவிடுத்தருச்சித்தயோத்திவந்
தணிமுடிபுனைந்தோய. (உங)

என்னவேபன்னியின்னனவிமையோரேத்திடவெம்பி
ரான்மகிழ்ந்தா, னனனவாதமககுவேண்டியவரங்களளப்பி
லாதனவளித்தருளிப், பன்னருந்திறலசேர்பண்ணவர்தமக்
குப்பரிவுடன்விடைகொடுத்ததன்பின்,றன்னிகர்மணிப்பொற்
சயனமண்டபத்திற்சார்ந்தனன்சக்கரக்கடவுள். (உச)

வேறு.

விஞ்சுசோதிவியன்மணிமண்டப
மஞ்சின்மீதுமலர்த்திருமாதரா
ளஞ்சியேபொன்னடிவருடத்திருக்
கஞ்சமாமலர்க்கண்வளர்ந்தானரோ. (உரு)

ஆதியந்தமிலாதவருளின்வாழ்
போதனைத்துபுலன்களடக்கினோர்
கோதிலாதகுணத்தர்குரோதமின்
மேதகுந்திறல்வேதபாராயணர். (உசா)

குறளுருபரங்குட்டத்தளவினர்
பொறையினீணடினர்பொங்கெழின்மெய்முக
மிறையுநோக்கிலவொண்ணருமாதவத்
துறையின்மேவினர்தத்துவசுத்தியோர். (௨௭)

சிலநற்சயன்றீதில்விசயன்சோ
மூலவேதமுழங்கிடுமுன்றில்வாய்
நீலமேனிநிமலனைநேடிய
வாலகிலியர்வந்துபொருந்தினர். (௨௮)

வந்துசேர்ந்தமணிக்கடைவாயிலிற
ந்தகாவலர்தாமெதிர்தாழ்ந்தெழீஇச
சிந்தையார்வந்தெவிட்டமுன்மணடபத்
தந்தமாதவர்க்காதனநல்கியே. (௨௯)

அருக்கியத்தொடருச்சனையாற்றியே
பொருக்கெனப்பணிவுற்றுபுகழ்ந்தனன
கிருத்தியின்பத்திருவருமேகியே
திருக்குலாமணிமுன்றிலிற்சென்றனர். (௩௦)

சென்றுபையவச்சேடியர்தங்களை
வென்றிமேவுநர்மெல்லவிளித்தரு
ளின்றுமாதவர்தொக்கனரெம்பிராற்
கொன்றுமன்பினுரைக்குதிரென்னவே. (௩௧)

வேறு.

பிருகுமாமுனிதவப்பேற்றின்வந்தருண்
முருகுலாவியமுகைவிண்டமுண்டகத்
திருமிகவிளங்குசெல்வத்தின்செல்வமே
தருணமண்டலங்கொள்சந்திரசேகரி (௩௨)

மன்னுடையபுவியெலாம்வளர்த்திடுந்திருக்
கன்னனுக்குத்திருக்கண்களாகிய
பெண்ணமுதேசுந்தரப்பெருந்தேவியுட
னண்ணரியவுணர்வினுறுகருத்தேறவே. (௩௩)

சங்கரிதனேயிணைசாற்றிற்பாதிமெய்
மங்கலவாணிநின்மருகியாகுநே
ரங்கனேயவாக்குனேயுறைதுமென்னிலயா
மிங்குணக்கிணையெவரியம்பலாவதே. (௩௪)

மணிதிகழுவிரொளிவடங்கொண்மென்முலைப்
பணிமொழிப்படவரவல்குற்பாவையா
ரணிதருமணிகநுநல்லழகுசெய்யுநின
றுணைமலர்பபதநதனைநதொழுதலசெய்தனம. (௩௫)

ஓமொழியுரைப்பதொன்றுடையமெய்த்தவ
ரோர்தருமந்தணர்நீளகடைத்தலை
சேர்தருமண்டபஞ்செறிந்துவைகுநா
ரீர்முகிலவணற்குநீநிகழ்த்துமென்றனர். (௩௬)

என்னவுமலர்த்திருவெழுந்துமுனறிலசெ
றன்னவர்தமைத்திருவழகிலாமையான்
முன்னவமதிப்பினுன்முததஙகானதிரு
நனனிலவெறிதநிடாநகைததிடடாளரோ (௩௭)

பெண்டமைகமதிகொடுபெருகுமோகையா
லொணடொடிநகைததலகேட்டுறுவர்யாவரும்
விண்டுவைமதித்திடார்வெகுண்டுசெல்லவை
குணடநீத்தருநெறிகுறிக்கொணடாரரோ. (௩௮)

அச்சுதன்றுயிலுணாநதவற்றைநாடியே
மெய்ச்சரோருகததிருமின்னைநோககுறுச்
சிச்சியந்தணர்க்கவமதிசெயகிற்றிநின்
னிச்சையினேகெனுவெடுத்தியம்புவான். (௩௯)

தன்றுமீதெழுந்தலைகருட்மொழிகுழ
வென்றிசேருலகினில்வேதபாரகர்க்
கென்றுமல்லன்பனென்றியம்புகம்பெய
ருன்றனுளின்றனைகொழிந்தகாலரோ. (௪௦)

கோதிலாவருள்…
காதலடார்… [illegible]

வேதியர்க்கவமதிவிளைக்கினுங்கவள்
கேதமிலக்குலக்கேடியாகுமால். (௪௧)

என்றவன்சபித்தலுமிரங்கியிந்திரை
தென்றிருப்பூவணந்தன்னிற்சென்றலர்க்
கொன்றையஞ்சடைமுடிக்குழகனைப்பணிந்
தொன்றியமாதவமுழந்துவைகினாள். (௪௨)

மாயவனஞ்சிப்பின்மஞ்சநீங்கிநற்
சேயதாமரைப்பதஞ்சென்னிசூட்டியா
னேயெனுமுன்னரிங்கிருத்துவேனெனாத்
தூயவேதியர்கடஞ்சூழலேகினான். (௪௩)

வார்கொள்பூண்முலைத்திருமயிலைநீக்கியே
கார்கொள்வண்ணத்தினான்வரவுகண்ணுறீஇப
பேர்விலந்தணர்பதம்பெயர்த்திடாமலே
சீர்கொளவைகுண்டமதனினின்றனர். (௪௪)

நின்றவந்தணர்தமைநேமிவானவன்
மன்றல்சேர்மலர்ப்பதம்வணங்கிவல்லையி
னொன்றியவன்புடனொடுங்கியேயெதிர்
நின்றுநன்மொழியினைநிகழ்த்தலுற்றனன். (௪௫)

பன்னருமாதவம்பயிலுமந்தணீர்
மன்னியதனதுபெணமதியினாலடைந்
தன்னவணைகைத்தனளடியனேன்பொருட்
டின்னதோர்பிழைபொறுத்திரங்கல்வேண்டுமால். ()

அந்தணரரியபாதாரவிந்தமேல்
வந்தவன்சிரமுறீஇவண்டர்மொய்த்திடு
சுந்தரக்கழற்றுகள்சுகந்தகுங்கும
சந்திரதிலகமேதானதாகுமால். (௪௭)

ஆங்கவரறைந்தசொல்லனைத்துமின்பமாத்
தாங்குமன்புசேர்தந்தையுரை
போங்குலவக்கணைதுரைத்தவாசக
பீங்கிலையிருந்துகேடுவைதுசென்னிமேல். (௪௮)

வேறு.

வேதமெய்நெறிவழாதுமேதகுநன்னீராடிப்
பூதிசாதனமணிந்துபொருவருமந்திரத்தா
னாதனையருச்சித்தேத்திநாடொறுமெரிவளர்க்கு
மாதவர்சிறினந்தம்வைகுண்டமில்லைமாதோ. (சகூ)

சதுர்மறைவேள்வியாளர்தமைச்சரண்புகுவதன்றி
நொதுமலர்தமமைவேண்டேனுவலருநுமமைநோக்கிக்
கதுமெனநகைத்தலால்யான்கட்டுரைசெய்தசாபம
பதுமபீடிகைமான்பெற்றுபபடாபுவியிடமபடர்ந்தாள். (ருo)

ஆதலாலறவிர்காளோவருஞ்சினமகன்றுநீவி
ரேதமில்வைகுண்டத்தினினிதமாநிருத்திர்மன்ற
போதுகேன்பொருந்துதிகிகினெனறருட்புனிதமூர்த்தி
யோதிடவுறுவராஞேருவபபுடனுரைப்பகானா. (ருக)

கொண்டல்வண்ணத்தயாமேசூர்ந்தனங்கருணைநின்ற
புண்டரிகப்பூங்கோயிற்பொருநதுகற்பரசியாமப
பெண்கொடிதனைநீவிட்டுபபெயாநதிடிறபிரிதலாற்று
யொண்டொடிதனுதுசாபமொழிவதுமொழிகுவாமால். (ருஉ)

புண்ணியப்பொருளாய்மேலாய்ப்புனிதமாய்ப்பூர்வமாகி
வண்ணமாம்பாரிசாதமரத்திருநீழறன்னிற்
கண்ணகன்ஞாலம்போற்றுங்கனலிமுன்னருச்சித்தேத்த
புண்மகிழ்வரங்கணல்குமொருசிவலிங்கமுண்டால். (ருங)

அன்னதொல்பூவணத்தினலர்ந்தசெம்மலர்ப்பூங்கோதை
தன்னிருவருடமந்தப்பண்டைநன்மணிகுண்டத்திற்
றன்னிகர்தவஞ்சாரப்பின்சார்ந்தரன்பூசையாற்றி
மன்னியதிருவினேடுவைகுண்டமருவிவாழ்வாய். (ருச)

செம்மையொன்றின்றியாருஞ்செய்திமையைப்பொறுத்தியாவர்
...மாந்தரினுரன்றூள்வணங்கில்யாம்வணங்கற்பாலா
...நீயரன்பர்க்குளதிகமாமாதலாலே
...ஞேர்தமக்குமேன்மையென்பதற்கையமின்றால். (ருரு)

ஆதலாலோதுவங்கேளலர்ந்தசெந்தாமரைக்கண்
மாதவமாயாகாயாமலர்வண்ணனினதுமெய்யு
மோதிடுமெமதுமெய்யுமோர்ந்திடினொன்றேயாகு
நீதியினெம்மைக்காத்தியென்றனர்நெறியினின்றோர். (௫௬)

இங்குநீரடைந்தபான்மையென்னெனவினவலோடும்
வெங்கனலவேள்விசெய்வானவிழைந்தனைவேண்டப்போந்தா
மங்கதுகாத்திநீயெனவந்தணராசிகூறப
பங்கயச்செழுங்கண்ணனும்பரிந்தவாவேள்விகாத்தான். ()

காத்தவர்விடைபெற்றன்னோங்ககனகூடத்தினைகாறும
வாய்த்தவைகுண்டம்வைகிவருடமீராறுமாளப
பூத்திகழ்திருவினைசைபுநதியிறபொருனைப்பபூமா
தேத்திடும்பூவணத்தினின்பகதினிழிந்துமன்னோ. (௫அ)

மாவணங்குறறசாபமாணடிடவேண்டியந்தப்
பூவணங்கோயில்கொணடபொருவிடைபபாகன்றன்னைக்
கோவணவுடையினானைகயோதிலாகருழகன்றன்னைக்
தீவணசசடையினானைச்சிவலிங்கந்தனிற்பூசித்தான். (௫௯)

பூசனைப்பலத்தினாலேபூமகள்சாபநீங்க
வாசையினவட்கணடனகேயருமணமுடித்துமீண்டு
மீசனைவழிபட்டேத்தியிந்திரையோடுமபின்ன
ரோசைகொள்வைகுண்டத்தினுலகெலாமபோற்றவுற்றான். ()

அந்தணர்தம்மைப்பூமாதவமதிசெய்ததோட
மகதகறபூவணத்தினன்றியேயகலாதென்று
லந்தகற்சிவலிங்கத்தானருண்மேனிதரித்துவந்த
வந்தகற்றலத்தின்மேலாமருந்தலமொன்றுமின்றாம். (௬௧)

வேறு.

தேவர்வந்துசேவிக்கத்திருவிழிக்
[illegible]வான
கூவினி[illegible]கொண்டகெல்லிலின
மேவுபாதியினேகனைவாழ்த்துவல். (௬௨)

அன்றுதொட்டுநன் காதிகேசவன்
மன்றவித்தலமானமியத்தினாற்
கொன்றையஞ்சடைக்குழகனைப்பணிந்
தென்றுமெதிர்முகந்தாவிருந்தரோ. (௬௩)

பூர்வலிங்கநோபோற்றுபச்சிமத்
தோகொளமபிரண்டேகுமெல்லைவாய்ச்
சார்பெரும்புகழ்த்தனறனுமத்தா
லோரிலிங்கமுண்டாக்கினானரோ. (௬௪)

தந்தலிங்கத்தினசந்நிதிக்கணே
சிந்தைகொண்டிடுரித்தங்கண்டன
னந்தநான்முகத்தயனையன்றகன்
றாந்திபூத்தருளும்பாதம்பிரானை. (௬௫)

ஓங்குநல்லுலகுண்டவெம்பிரான
பாங்கினல்வழிபாடுசெயபரன
பூங்கழற்பதங்கண்டுபோற்றினோ
தாங்குபாவவெஞ்சட்டைநீங்குவார். (௬௬)

உரைகொண்மாயனுக்குத்தரத்திசை
யரைகொளம்பிடுதூரத்தாழ்கிணற
றுருவமாகியேயோங்கிடும்புகழ்
விரவுமந்தநலவிண்டுதீர்த்தத்தில. (௬௭)

மண்டுகாதலின்வந்துமூழ்கியே
விண்டுலிங்கத்தைக்கண்டுமேவினோர்
பண்டுசெய்கொடும்பாவநீங்கியே
யெண்டருஞ்சிவலோகத்தேறுவார். (௬௮)

இடபத்திங்களினிற்றுமேவுநாட்
டொடருமன்புடன்சொல்லிலிங்கத்தி
னடியிறைஞ்சினோராற்றிடும்பவ
கொடியினீங்கிடுதுணைக்குநேர்வியாய். (௬௯)

செப்புகின்றவத்திங்களிற்றின
மொப்பிலாதபனுநிக்குமுன்னரோ
யப்புனறபடிவோரநும்பல
னிப்பரிசெனவியமபவொண்ணுமோ. (எ0)

மினனுமாமணிவிமானமேவியே
துனனரமபையர்சூழ்ந்துபோறறவே
தென்னுறுநதிசைசோகராமலே
மன்னுபேரின்பமருவிவாழுவரோ. (எக)

கழறுமபரமகைவருகதத்தி
னெழுபதின்கடையிட்டவெட்டதா
மழிவில்த்தியாயம்மதாமரோ
வழுவினமாதவமநிததுககாண்டியால (எஉ)

வேறு,

பங்கயத்திருமஙகைசாபநீவிர்த்திடுகாதைதான்
றங்குநற்சொலபகர்நதுளோரதனுசெவிகொடுநாடுவோர
துங்கமிககடலன்களசிதுன்றுளத்தருள்கூரவே
மங்கலத்தினினந்திரோவந்துரைககினுமரிதரோ. (எங

இலக்குமிசாபமோசனச்சருக்கமுற்றியது.

ஆகச்செய்யுள் (அஙஎ)



இலக்குமிசாபமோசனச்சருக்கச்சுருக்கவசனம்.

...த்திலே, செம்பொற்றிருமண்டபத்தின மத்...
...லே, இலக்குமிசமேதராக விஷ்ணுமூர்த்தி வீ...
...ர் திருமுன்பு வித்தியாதரர்பாடினர். அரம்பை
முதலாயினோர் ஆடினர். தேவர்முதலாயினோர் துதித்தனர். அப்போ
அவர்களுக்கு வேண்டியவரங்களை அருளி விடைகொடுத்த பின்
விஷ்ணுமூர்த்தி சயனமண்டபத்தைச்சார்ந்து திருமஞ்சத்திலே ...
...குமிதேவி திருவடிப்பணிவிடைசெய்ய நித்திரைபுரிந்தனர். பிரு...
...ரெழுந்து, ஐம்பொறிகளையும் அடக்கித் தவஞ்செய்பவரும், கு...

வினரும், அங்குட்டத் தளவினருமாகிய வாலகில்லியரென்னு முனிவர்கள் வந்தார்கள். வந்தவர்களை வாயில்காப்போர் எதிர்சென்று வணங்கி உபசரித்து ஆசனத்திலிருக்கச்செய்து, உள்ளே போய்ச் சேடியர்களை அழைத்து முனிவர்கள் வரவை விஷ்ணுமூர்த்திக்கு விண்ணப்பஞ்செய்யும்வண்ணந் தெரிவித்தனர். அதனையுணர்ந்த சேடியர் இலக்குமிதேவியைவணங்கி முனிவர்கள் வரவை விஷ்ணுமூர்த்திக்கு விஞ்ஞாபிக்கும்படி வேண்டினர். வேண்டினவுடன் அம்முனிவர்கள் குருபிகளாயிருத்தல்பற்றி இலக்குமிதேவி நோக்கிப் பெரிதும் நகையாடினள். உடனே அம்முனிவர்கள் விஷ்ணுவையும் மதியாமற் கோபங்கொண்டு இவ்வைகுண்டத்தைவிட்டு வந்தவழியை நோக்கிச்செல்லும் பொழுது, விஷ்ணுமூர்த்தி நித்திரைநீங்கி, நிகழ்ந்தவைகளை யுணர்ந்து இலக்குமியைப்பார்த்து "இதுகாறும் யான் அந்தணர்களுக்கு அன்பனென்பதை நீமாற்றினாய்" உயர்ந்த குலமகளாய்க் கணவன் கருத்தின்வழி ஒழுகுபவளாயினும் அந்தணர்களை அவமதிசெய்தால் அவள் குலக்கேடியாம்" என்று சபித்து விலக்கினர். அச்சாபத்தையடைந்த இலக்குமி வருந்தித் திருப்பூவணஞ்சேர்ந்து தவஞ்செய்துகொண்டிருந்தனள். இலக்குமியை விலக்கியபின்பு விஷ்ணுமூர்த்தி பயந்து விரைந்துசென்று முனிவர் குழாத்தை அடைந்து வணங்கி, "ஹே முனிவர்களே? என்னுடைய மனைவி பெண்மதியினாலே நகைசெய்ததைச் சிந்தத்தில்வைத்தருளாது கருணைபுரியவேண்டும்" என்று பிரார்த்தித்தபோது முனிவர்கள் இரங்கி, "ஹேவிஷ்ணுமூர்த்தி? இலக்குமியானவள் பன்னிருவருடம் மணிகன்னிகையில் மூழ்கித் தவஞ்செய்ய நீபோய்ப் புட்பவனேசுரரைப் பூசித்தால் அவமதித்த அபராதமும் சாபமும்நீங்கும். பின்பு அவளோடு நீ இவ்வைகுண்டத்தில் வாழ்குவாய்" எனறு அருளினார்கள், உடனே விஷ்ணுமூாத்தி மகிழ்ந்து, "முனிவர்களே நீவிர் இங்கேவந்த காரியம்யாது" என்று வினவியவழி அதற்கு அம்முனிவர்கள் "யாங்கள் செய்யும் வேள்வியைக் காத்தல்வேண்டும்" என்றனர். அங்ஙனமே முனிவர்கள் வேள்வியைக் காத்துப் பின்பு திருப்பூவணஞ்சேர்ந்து, சிவலிங்கப்பெருமானைப் பூசித்ததனால் இலக்குமிக்குண்டான அபராதமும் சாபமும் நீங்க அவளோடு வைகுண்டஞ்சார்ந்துவாழ்ந்தனர். திருப்பூவணேசருக்கு மேலைத்திசையிலே, இரண்டம்பு செல்லுந்தூரத்திலே, விஷ்ணுமூர்த்தி தம்பெயராலே ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்தனர். ஒருதீர்த்தமு

மூண்டாக்கினர், சித்திரைமாசத்திலே, ஆதிவாரத்திலே, அத்தீர்த்தத்திலே மூழ்கி விஷ்ணுலிங்கத்தை வழிபட்டோர் பாவநீங்கிப் பரமுத்திபெறுவர். இங்ஙனம் பிரமகைவர்த்தபுராணத்திலே, எழுபத்தெட்டா மத்தியாயத்திலே கூறப்படும்.

திருச்சிற்றம்பலம்.

---

## பதினோராவது.

## உமாதேவி திருவவதாரச்சருக்கம்.



உற்றதிருமாலுடனியைந்ததையுரைத்தாய்
தற்பரமசத்தியவதாரமுரையென்னக்
கற்றுணாவுறுஞ்சவுனகன்கழறலோடும்
பொற்புறுபுராணமுநிபுங்கவனுரைத்தான். (க)

மன்னுமகவான்முனிவர்வானவர்வழுத்த
வுன்னரியசத்தியவுலோகமதின்மேனாட்
சென்னியொருநான்குடையசெல்வனையிறைஞ்சித்
தன்னிகரிலாதவருட்டக்கனிதுரைத்தான். (உ)

ஒக்கவுயிர்சட்குயிரதாயுறைகுவோனுய்த்
தொக்கவறிவாகியுயர்தொல்லமரர்போற்று
மிக்கவொருவன்றனைவிளம்பியருளென்னத்
தக்கமலர்வட்டவணையிற்கடவுள்சாற்றும். (ங)

முன்னொருதினத்தனின்முகுந்தனுமியானும்
பன்னரியபன்றியதுவாய்ப்படியிடந்து
மன்னமதுவாகிவிண்ணடைந்தநுபறந்து
மின்னுமறியாதசிவனேயிறைவனென்றான். (ச)

இறைவனவனென்னையுலகின்றருளிமாய்க்கு
முறைமைதருமுத்தொழிலுமூவர்கடனன்றே
வறையினமரர்க்குளவனுதிபெறுநாமம்
பெறுவதேவனைவருள்பிதாமகனுரைப்பான். (ரு)

சீலமுடனென்னைமிகுசெங்கணெடுமாலை
ஞாலமதுதன்னைமுனநல்கியதிகாரம்
பாலுறவெமக்கதுபடைத்தருளநல்கி
மேலவனழித்தருள்வன்மீட்டும்வினைதன்னால். (௬)

பங்கமறவேயதுபடைத்தருளவெங்கட்
கங்குமகிழ்வோடுபினுமப்பரிசளிப்பன்
சங்கரனவன்செயலதன்றியொருதன்ன
மெங்கள்செயலாற்புரியவெண்ணிடவுமுண்டோ. (௭)

பேதமறயாவையினையும்பிரமமென்றே
வேதமவையோதுவதென்னென்னின்மிகுமிந்த
வாதரவுபூண்டவருமந்தவெழின்மைந்த
வேதமறவேமுகமனாலவையியம்பும். (௮)

இத்தகைமைநாடியினியெங்கள்பெருமானைப்
பத்தியுடனீயும்வழிபாடதுபுரிந்தே
யத்தனைநினைந்துநலருந்தவமுழந்தான்
முத்தியவனிற்கருளவனென்றயன்மொழிந்தான். (௯)

என்றுரைசெய்தந்தையடியின்கணுடன்வீழ்ந்து
நன்றெனமகிழ்ந்துவிடைநல்கியருளென்ன
மன்றல்கமழ்மானதநல்வாவியிடைமைந்த
சென்றரியநற்றபசுசெய்கெனவிடுத்தான். (௧௦)

வேறு.

சாரநதுடனந்தத்தடந்தனில்வளங்கொடாமரைக்கண்க
ால்வாரி, யார்ந்துநற்றவத்தினருந்துறைபோயவருந்தவர்
ோன்றயனன்பு, கூர்ந்தருளுபதேசந்தனையுள்ளங்கொண்ட
ளுடன்வழிக்குறுகிச், சேர்ந்திடுமூலவங்கியையெழுப்பிச்
ரத்தினிற்சொலித்திடச்செலுத்தி. (௧௧)

நம்பிரான்றனக்குநற்புநாத்தின்வெருமமுத்தீராட்டி, யை
புலஞானமாலிகைசூட்டியமர்மனப்பூசனையாற்றி, வெம்ப

னிமாரிவெயில்வளியிவற்ருன்மேவியமெய்நனிவருந்தி, யும்பர்
தம்பிரான்வந்துவப்புறவருடமொராயிரமருந்தவமுழந்தான்.

தக்கவாயிரமாமாண்டுநற்றவஞ்செய்தக்கனுக்கருளுவான்
விரும்பித், தொக்கபொற்பிதிரிறசுணங்கினையணிந்துசுமந்தக
ச்சினையிறுத்தோங்கி, மிக்கவான்வட்டமுகட்டினைமுட்டிவெ
ளியினையடைத்திடுகொங்கை, மைக்கருங்கண்மாமயிலொடு
மெம்மான்மழவிடைமேற்கொடுவந்தான். (கங)

அண்ணல்வந்தனனென்றுடனெழுந்தேயானந்தபரவ
சனாகி, விண்ணின்மேற்பொருவல்விடைக்கொடியுயர்த்தவிம
லனலவிமைத்தவின்மூன்று. கண்ணுமான்மழுவுங்கரசரணமு
மெய்க்கவினுமேதன்கணேபுகுத, மண்ணிடையேவீழ்ந்தெ
ழுந்தனன்றக்கன் வழுத்தினனுன்மறைதன்னால். (கச)

ஆயகாலையிலங்கணனருள்புரிவானருந்தவங்கண்டகமகி
ழ்ந்தே, நேயமோடெம்மைநினைந்துசெய்தவத்தைநிகழ்த்துதி
தக்கநீயெனலு, மேயதோர்சென்னியிற்றிடவயன்முனெழுதிய
தலைவிதிவசத்தாற், றூயநற்பசுந்தேன்சுரும்புணுங்கமலத்து
ணைப்பதந்தொழுதிவைசொல்வான். (கரு)

நினைவரிதாகிநினைந்துயிர்க்குயிராநின்மலநினைவணங்கி
டுவா, ரனைவருமெனைவந்தடியில்வீழ்ந்திறைஞ்சியருந்துதி
செய்திடல்வேண்டுந், தனையிகர்தேவர்தானவரொன்றுஞ்சாற்று
மென்பணிகளாற்றிடவு, முனையலதொருவர்தனைவணங்காத
வுரிமையுமுதவுதல்வேண்டும். (கசு)

படந்தருமுரகஞ்சுமந்திடக்கிடந்தபௌவநீருடுத்தபார
கமு, மிடைந்தசீரடைந்தவிண்ணவர்பதமும்வேதமாலாதியர்
பதமு, மடர்ந்தமர்விளைக்குமசுரர்தம்பதமுமனைத்துமென்னா
ளுமென்னாணை, கடந்திடாவண்ணந்திடம்படவேந்தாய்க்கரு
திநீயருளவும்வேண்டும். (கஎ)

பொருவரும்புதல்வர்புதல்வியர்த்தக்குபொன்றிடாதிரு
த்தலும்வேண்டு, மூரியவண்டங்களுதவிடுமுமைமையெற்கொரு

மகவாகவும்வேண்டு, மருமறையவன்போலன்பிலேன்பால்
வந்தருமணமுடிக்கவும்வேண்டுங், கருதரிதாயகடவுணீயென்
னுக்கருணைவாரிதியுரைசெய்வான். (கஅ)

தவலரிதாயதவமிகமுயலுந்தக்கநற்றலைமைநீபெறவே,
யிவ்வியுனக்களித்தாமித்திருநீங்காநிம்முறை நடத்தியாலென்
னுக், குவளைசேர்தடங்கட்கோமளவல்லிகொண்டகூறுடை
க்குழகன்செம், பவளவார்சடையிற்பகிரதிமிலைச்சும்பராபர
ன்கயிலையிற்படர்ந்தான். (கக)

வேறு

எந்தைமறைந்தபினைத்தியிறைஞ்சி
கந்தினையேந்தியநாரணனற்பூ
வுந்தியுதித்தவனுத்தமமைந்தன்
சிந்தைமகிழ்ந்துதிளைத்தனனம்மா. (உ0)

காமகண்மேவியநான்முகனைத்தன்
பூமருவுந்திதழ்புந்தினைந்தா
னேமுறுகலவரமீந்தனதையெங்கோன்
மாமலரோனுமனத்தின்மதித்தான். (உக)

பன்னரிதாயபரன்றனைநோக்கி
மன்னியமாதவமைந்தனுழந்து
மினனலின்மூழ்குறவிவ்வாமுற்று
னன்னலமன்றிதுகாடிடினன்றே (உஉ)

என்றுரையொன்றையுமெண்ணலனாகி
முன்னவன்வந்துகன்முத்தியையெண்ணான்
பின்னினியென்னதுபேசுவனென்னுத்
தன்னதுநெஞ்சுதரிக்கலனாகி (உங)

இருந்தினபன்னியெனென்றரிதாய
மருந்தனைமைந்தனைவல்விலைாங்தேத்திப்
பொருந்தினனசிபுகன்றனன்மிக்க
பெருந்தகைமேயபிதாமகன்மாதோ. (உச)

அல்லிமலர்த்திகழையநலன்பா
லொல்லையினீநகரொன்றுசெயென்னு
மல்லல்கொடக்கநன்மாபுரமென்றே
தொல்லழகாபுரிதோற்கவிதித்தான். (உரு)

அந்தமில்சீர்புனையப்புரிநோக்கா
விந்தநகர்க்கிணையின்றெனவேதன்
றந்தருள்கோயிலிற்சார்ந்தனன்கூடம
வந்துபுகுந்திடுமாகளிறேபோல். (உசா)

தண்ணளிசேர்மதிசார்கவிகைக்கீழ்
வண்மையினோங்குகைமன்னியசெங்கோ
லெண்ணரிதாமுலகெங்குமளப்பத்
திண்ணியவாணைதிசாமுகஞ்செல்ல. (உஎ)

பூவினின்மேவியபுங்கவனுதி
தேவர்கடானவர்சித்தரியக்கர்
மூவுலகும்புகழ்முச்சுடரோனை
யாவருமேத்தவிருந்தரசுற்றான். (உஅ)

வேறு.

பின்னொருநான்குசென்னிப்பிதாமகன்பதத்தில்வந்த
மன்னுசீர்வடமீன்கற்பின்மறைக்கொடிதனைமணஞ்செய்
துன்னருமுலகநல்கவொராயிரமைந்தர்த்தந்தாங்
கின்னருளீசற்போற்றியிருந்தவஞ்செயவிடுத்தான். (உகூ)

அந்தமானதவாவிக்கணருந்தவஞ்செய்யமைந்தர்
நந்திசைமகதிவீணைநாரதனங்கணெய்தி
யிந்தமாதவம்புரிந்ததென்னெனவிறையைநோக்கித்
தந்திடவுலகம்யாவுந்தவம்புரிகின்றோமென்றார். (௩௦)

என்றலுநன்றுநன்றென்றிருகரந்தாக்கிக்கு
மின்றிகழ்வாழ்வுதன்னைமெய்ம்மையின்விரும்பினீரா
லென்றுநன்கழியாவின்பத்திருந்தாசியுற்றுமென்னு
வன்றவர்க்குபதேசஞ்செய்தகந்தரத்தெகினனே. (௩க

ஆருளுபதேசஞ்செய்தம்முனிசெல்லமைந்தர்
பேரருளோடுங்கூடிப்பேரின்பவாரிமூழ்கி
நாரணன்கமலக்கோயினான்முகனண்ணவொண்ணாப்
பூரணமோனஞானப்பூங்கழனீழல்சேர்ந்தார். (௩௨)

வேறு.

ஆனகாலையினருந்தவம்புரியுநன்மைந்தர்
பான்மைநாடுறுமென்றவட்படர்ந்தபின்றக்கன்
றானும்வந்தருண்மைந்தர்க்குச்சத்தியமோன
ஞானநாரதனவின்றதைநாடினன்வெகுண்டான். (௩௩)

தக்கனுபிடைத்தக்கநமமைந்தர்கள்யாரு
மிக்கமுரதியினபேவினர்விதியிதுவெனனுத்
துக்கமுற்றுமெய்துணெணனநடுங்கியசூழல்
புக்கனனபினுமாயிரமபுதல்வரைத்தந்தான். (௩௪)

தந்தமைந்தரோராயிரவோரையுந்தக்கன்
மைந்தவம்மினீர்மானதமடுவினிலேகி
யிந்தமானிலம்படைத்திடவெந்தையைநோக்கிச்
சிந்தைகூர்தவஞ்செயுமெனச்செப்பினன்விடுத்தான். (௩௫)

விடுத்தவாயிரமைந்தருமேவிமானதமா
மடுத்தலத்திடைமைகியேமாதவமபுரிய
வடுத்தனன்முனமகன்றநாரதனருள்வீடு
கொடுத்திடும்படிகோதிலாக்குமரர்கடம்முன். (௩௬)

நீதிமாதவம்புரிந்திடுநீவிர்கள்யாவிர்
யாதுகாரணமித்தவமிழைக்குவதென்னத்
தாதையாந்தக்கன்றன்பணியாற்படைத்திடவா
றுகன்றன்னிடைக்கற்றவமுஞற்றுதுமென்றார். (௩௭)

என்னலோடுமங்கிணையத்திநாரதனிரங்கி
பின்னுமொக்குறுமென்னவேவிளிந்திடும்யாக்கை
கன்னினீர்நிலையென்னவேதக்கிடர்கொழிற்கா
மன்னுமாதவமிழைக்குதிர்மம்மரினம்மா. (௩௮)

ஈதின்றர் பிறப்பிறப்புறுநாகிடையெய்தும்
பேதையோர்தொழிறபிடிக்கனி பிறபபிறப்பில்லா
வாதிநாயகனழிவிலாவருட்பதநீழல்
காதலாலினியடைவதேகருமமென்றுரைத்தான். (௩௯)

உரைத்தநாரதன்றனைபபணிநதுற்றநன்மைந்த
ரருத்தியாலெமக்கருளெனவம்முனிதன்றாள்
சிரத்தினன்குறவிருத்தியேசெபபினன்வாக்குத்
திருத்தமாந்திருவஞ்செழுத்தருளுபதேசம். (௪0)

திகழ்ந்தமெய்த்திருவஞ்செழுத்தருணிலைசெப்பி
மகிழ்ந்துபினதிரிமலகதனைமாற்றிவெமபிறவி
யகழ்ந்தருந்திடவரியஞானமுநமருளிப
புகழ்ந்திடுந்தவநாரதன்விண்ணிடைப்போந்தான். (௪௧)

நடையின்மேதகுநல்லெழின்மைந்தர்கண்ஞானப்
படைகொடைம்புலபபகைகளைவெனறுதமபரிவா
விடைவிடாதுநலவுறைசிவயோகினிலிருநதே
முடிவிலாதபேரின்பமாமுத்தியையடைந்தார். (௪௨)

அன்னமைந்தர்களாயிரவோருநன்முத்தி
தன்னையெய்தலுஞ்சதுர்முகபபிரான்றிருமைந்த
னின்னும்வந்திலாரெம்மகாரென்கொலோவென்று
மன்னுமானதவாவியின்வந்தனன்மன்னோ. (௪௩)

வந்துமானதவாவியின்மைந்தரைக்காணு
னிந்தவாறிதுவென்னெனவேங்கியேவிரங்கா
முந்தைநாளினம்மைந்தர்முத்தியினைற்று
மந்தநாரதன்புணர்ப்பிதுவாமெனவறிந்தான். (௪௪)

அருளினீர்மையாலப்பரிசுணர்தலுமுள்ள
மருள்கலந்ததுமன்னுயிர்பதைத்ததுவையம்
வெருவுகின்றதாய்வீங்கியவுயிர்ப்பின்வெங்கோப
விருள்பரந்துசென்றேறியதெண்டிசாமுகத்தும். (௪௫)

பாக்கினின்றலைப்பரித்தயார்டங்களும்படைப்ப
நாகருந்திறன்மைந்தர்க்குநன்கதியளிப்ப

வாய்ந்தடைந்தனனன்றவராருயிருண்பான்
போந்தகூற்றிவனென்றுதன்னெஞ்சகம்புழுங்கி. (சகூ)

நொந்துபங்கயன்மைந்தன்பின்னுவனுவான்மகதி
நந்துவீணைசேர்நாரதன்செயலிதுவானற்
றந்துமீரிடையாரலாற்றனயரைப்பெறவான்
சிந்தைசெய்கிலனென்றுதன்றிருநகர்சென்றான். (சஎ)

மிக்ககாதலின்பேவினன்மெல்லியற்சோந்து
திக்கெலாம்புகழ்செனறிடச்செலனிமூன்றிட்ட
தொக்கவெண்டருமிருபதுதுழயிடையாரைத்
தக்கன்மீண்டுநற்பரிவொடுதந்தனன்மன்னோ. (சஅ)

தருமனுக்குயர்கிரியைநல்வபுவைகீர்த்திசாந்தை
சுரசைபுத்திநற்சுபுத்தியேதுட்டையோடிலச்சை
திருதிகத்திமென்சிரத்தைமேதாவெனுந்திருப்பே
ரருளிஞகுமிப்பத்தின்மேன்மூவரையளித்தான். (சகூ)

பிருகுமாமுனிமரீசியேபெரும்புகழ்மன்னும்
பொருவிலாவருட்புலத்தியனங்கிராபுலகன்
றிருவலந்திகழ்வசிட்டனத்திரிவளர்செந்தீக்
கிரதுநற்பிதராவெனக்கிளத்திடுமிவர்பால். (௫0)

புகல்கியாதிசம்பூதிநாரிசந்நதிமிருதி
துகளிரிதநிடுபிருதியூர்சையனசூயை
நிகழ்சுவாகமைசுவதையாம்பதின்மரைநிரலே
மகிழ்வினின்பநன்மணம்புணர்வித்தனன்மன்னோ. (௫க)

பின்னர்நான்முகப்பிதாமகப்பிரானருள்பிள்ளை
மின்னுகின்றநற்றாரகைக்கணங்களின்மேலா
முன்னரும்புகழோங்குமூவொன்பதுமடவார்
தன்னேர்பெறவுதவியேதண்மதிக்களித்தான். (௫உ)

வேறு.

பின்னநன்மருகற்கன்புறலின்பகன்மணம்புணர்த்திப்
பின்னிடுமன்னோன்மேவும்பதியிடைவிடுத்தபின்ன
ரின்னமன்னவர்கண்மைந்தரவர்தருமைந்தரானோர்
மன்னியகேளிர்துன்னமகிழ்ந்தரசியற்றுநாளின். (௫௩)

படுமணிச்சோதியண்டபகிரண்டம்படர்ந்துசெல்லும்
வடிவறுசிறப்பின்மிக்கவட்டவான்முகடுமுட்டிக்
கொடுமுடியிடறுமவெள்ளிக்குன்றினமேற்குழகனோர்நாள்
விடுசுடர்க்கிரணதாரகவீற்றிருந்தருளினானே. (ருச)

அந்தநல்லமையந்தன்னினம்பிகைவணங்கியெந்தாய்
சந்ததமுயிர்கட்கெல்லாஞ்சஞ்சலப்படுத்துகின்ற
வெந்துயர்ப்பிறப்பிறப்பைவிட்டிவீடருளுந்தன்மை
யிந்தவாறடியனேற்கிங்கியம்பிடவேண்டுமென்றாள். (ருரு)

என்றுமையியம்பநன்றென்றினவரிவண்டுகிண்டு
கொன்றையந்தேன்றளிக்குங்கோடீரபாரத்தெந்தை
பொன்றிகழ்சுணங்கணிந்தபொற்படாம்போர்த்தகொங்கை
மின்றயங்கிடைவைவேற்கண்மெல்லியற்குரைப்பதானான். ()

தன்னிகராகிநின்றசகளநிட்களமெமக்கு
மன்னியவுருவமாகும்வகுத்திடுஞ்சகளமான
வுன்னருளதனையாமேயுபாதானமாகியென்று
நின்னொடுமன்பர்போற்றச்சதாசிவமாகிநிற்போம். (ருஎ)

நிட்களவுருவந்தன்னைநிகழ்த்திடினுலகுக்கெல்லா
முட்பொருளாகியெண்ணிலுயிர்க்குயிராகிமனனோ
வெட்டருந்தயிலமென்னவெங்கணுநிறைந்தெஞ்ஞான்றுந்
தெட்பமதாகியார்க்குந்தெரிவரிதாகுமன்றே. (ருஅ)

உருவொருநான்கதாகியுற்றிடுமருவநான்கா
யருவுருவொன்றேயாகியையைந்துபேதமாகி
மருவியதிருமால்கஞ்சமலரயன்வாசவன்சீர்
பொருவருமுனிவர்விண்ணோர்போற்றிடவீற்றிருப்போம். ()

அந்நிகழ்பரசிவன்றன்பராசத்திதன்னையன்பாய்த்
தந்திடுமதனிலாதிசத்தியாமதனிலிச்சை
வந்திடுமதனின்ஞானமாமதிற்கிரியைமன்னு
மங்கமிவ்வைந்திற்கொவ்வொன்றுயிர்த்தொன்றதாகும். (சுo)

அந்தமிலாதவிந்தவைந்துசத்திதன்னுற்
றந்தனமயன்மாலீசன்மகேசனற்சதாசிவந்தாம்

வந்திடக்கருதியன்னோர்மருவுமைந்தொழிலியற்ற
ந்திருவருளினாலேகாடொறுநடாத்துவாமே. (சுக)

தாவில்பல்லுயிர்க்கெஞ்ஞான்றுந்தருமிருவினையறிந்து
நாவெடுத்துயம்பலாற்றாநாகொடுசுவாச்சமீதும்
பூவின்மேலயன்மால்காணாப்பொருவருஞானிட்டை
மேவினோர்தமக்குநந்தாவீடருள்புரிதுமனறே. (சுஉ)

ஆதலாலைந்தொழிற்கொளபபிரமாண்டமெல்லா
மோர்டினின்கூறுமென்றுணாககருமொருவன்கூற
யீதெலாமெனதுகூறென்றெண்ணியேயெமபிரான்முன்
காதலிற்றனைமதித்துக்கழறினள்காமக்கோட்டி. (சுந)

மங்கைநீயெம்முனின்னைமதித்தனையுலகெலாமங்
கங்குயிர்க்குயிராய்நின்றேயருள்புரிந்திலமேற்செய்ய
பங்கயனாதியாயபண்ணவர்பணிகடமமா
லிங்கொருசெயலதுண்டோவென்றனனெவர்க்குமேலோன்.

கண்டினுங்கனிந்ததீஞ்சொற்கலங்கிடந்தொளிருங்கொங்கை
யொண்டொடிநின்னாலுண்டோவோர்செயலதுகாண்டி
யெண்டருகாதலாலென்றெடுத்திசைத்தருளியெங்கோன்
பண்டுபோற்பரயோகத்திற்பரிவுடனிருந்தானன்றே. (சுரு)

இறைசிவயோகமெய்தவெழுதுசித்திரமதென்ன
சிறையுயிரண்டமியாவுநிகழ்ந்திடநெஞ்சமஞ்சிச்
சிறிதுநின்செயலென்னாதுதீயனேன்றனைமதித்திங்
கறிவிலாதுரைத்ததோடமதுபொறுத்தருள்செயென்றே. ()

சீருறுகமலச்செங்கைகூப்பியேதிருமுனின்றிங்
கோர்வரிதாயவண்டத்துற்றிடுகின்றவெண்ணி
லாருயிர்த்தொகையைமுன்போலளித்திடவேண்டுமென்றாள்
பேருறுமண்டமெல்லாம்பெற்றெடுத்தருளும்பேதை. (சுஎ)

அன்னமன்னவள்வருந்தவாருயிர்த்தொகையளிப்பான்
ன்னிகருந்திரேசர்தங்களையுன்னலோடு
ன்னவர்யாருமீண்டியருச்சுனவட்டத்தேகி
ன்னியசிவலிங்கன்வள்ளலையருச்சித்தார்கள். (சுஅ)

அருச்சனைபுரிந்தபின்றையன்னவர்முன்னமூன்றோன்
பொருக்கெனவந்துதோன்றிப்பொன்றுயிரனைத்துநல்க
விருப்புறுமயன்மாலேனோமெய்த்துயிலுணர்ந்தோரொன்ன
மரித்தனரெழுந்தார்மூடும்வல்லிருணீங்கிற்றன்றே. (௬௯)

ஆலகாலம்பழுத்தவந்தநற்கந்தரத்தோன்
சீலமாஞ்சிவயோகத்திற்சேர்ந்தினிதிருந்தகாலை
மாலயன்முதலோர்செய்கைமாண்டனவொன்றுல்யார்க்கு
மேலவன்சிவனேயென்றுவிரித்திடவேண்டலின்றே. (௭௦)

அருள்வரமமலற்கேளாவவ்வுருத்திரர்கண்மாகத்
திருசுடர்சேர்நாணென்னவெல்லியினுன்கியாமம்
பரமநிற்பூசைசெய்வோர்பரகதிபெறுதல்வேண்டும்
வரமருளென்னச்செயயமலர்த்திருவாய்மலர்ந்து. (௭௧)

சங்கரன்பின்னரோசாதசவுருத்திரர்கட்கெல்லாம்
பங்கமில்வரமீந்தன்னோர்பதியிடைப்படாவேவிச்
செங்கமலத்தோனாதிதேவர்கள்யாரும்போற்ற
வங்கணவானவன்மிக்கோங்குமகவிருவிசும்பிற்போந்தான். (

செம்பதுமத்தோனாதிதேவர்பின்கயிலைமேவி
யெம்பணியிழந்துவாளாவெண்ணமொன்றின்றிப்பன்னாள்
வெம்பலமடைந்தியாமேமெய்யுணர்விகந்தோமெங்க
டம்பிரானருளினீராற்சாற்றுதிமாற்றமென்றார். (௭௩)

அன்னவர்பன்னியிவ்வாறறைதலுமமலன்கேளா
மன்னியவுணர்வுமாண்டவரென்முறைவழுவுகின்ற
தின்னவையிறைவிக்காகுமிற்றைநாட்கைப்பிடித்துந்
தொன்மறைமுறைநீராற்றுமென்றனன்றொழுதுபோந்தார். ()

அரிநிகழ்மதர்வேற்கண்ணியமலனையடிவணங்கிக்
கருதருமுயிர்களாற்றுங்கருங்கொடும்பவங்களென்பான்
மருவிடுமென்றதென்னைவாய்மலர்ந்தருளுகென்ன
வொருவிருமதற்கணும்பர்தம்பிரானுரைப்பதானான். (௭௫)
நின்னைநீமதித்துக்கம்முனிகழ்த்தினையாதகாலை
மன்னுயிர்த்தொகையுஞ்செய்கைமாற்றினமானிவேண்டிப்

நின்னைமேதித்தும்முனிகழ்த்தினையாதலாலே
மன்னுயிர்த்தொகையுஞ்செய்கைமாற்றினமானிவேண்டப்
பின்னுமுண்மகிழ்ந்துமுன்னர்ப்பெற்றியிற்றந்தேம்யாமீ
துன்னிடினுன்னால்வந்ததுன்னிடத்தாகுமன்றே. (எசு)

ஈங்கிதுவன்றியின்னுமிசைத்திடினுலகமெல்லாம்
பாங்கினுளீன்றநிறகுப்பலித்திடும்பவங்களியாவுந்
தாங்கிடுந்தன்மைத்தாருமென்றனன்றுணுவாகி
யோங்குலகங்கட்கெல்லாமுயிர்க்குயிராகிநின்றோன். (எஎ)

நித்திலக்கொத்துமாலைநெருக்கினமுலையாளஞ்சிக்
கைத்தலங்குவித்தியானைகருத்தினின்மதித்துரைத்த
வித்துயர்வீடுமொன்றியம்புதியெந்தையென்னப்
பைத்நலைமணியொதுச்குமபன்னகாபரணன்சொல்வான். ()

காவிமங்கருலுநன்னீர்க்காளிநதிநதியினெய்தித்
தாளதாமரையினமேவித்தன்னிகரின்றிமன்னு
நீளிருவிசுமயிரோங்குநிலவுகான்றொளிருங்கோல
வாள்வலம்புரியாயங்கண்மாதவமபுரிந்துவாழ்தி. (எகூ)

மிக்கவர்நதியிறபின்னோர்விழைவுறுகுழவியாவை
தக்கனுமகெய்திநின்னைததன்றிருப்புதல்வியென்று
பக்கமோடக்கணந்தன்பதியிடைக்கொண்டுசெல்லத்
திக்குலகேத்தவன்னான்சேயெனவளர்திமாதோ. (அ0)

வளம்பெறவையாண்டேகமன்னியேயெம்மைபுன்னி
யுளங்களிதூங்கவீயுமொண்டவம்புரிதியாமே
விளங்கிழைநின்பான்மேவிமிக்கநன்மணம்புணர்ந்து
வளங்கமில்கணங்களோடுங்கயிலையில்வருதுங்காண்டி. (அக)

என்றிவையிறைவன்கூறவெண்ணரும்புவனமீன்ற
குன்றலங்கூந்தற்செவ்வாய்மாதுமைவணங்கியேத்தி
நின்றிகழிடைநுடங்கவிடைகொடுவிளங்கும்வெள்ளிக்
குன்றினையொருவிமிக்ககுவலயத்திழிந்துபோந்தாள். (அஉ)

[illegible]
[illegible]

வாளுலாவியதடங்கண்மங்கைபங்கனைநினைந்து
தாளதாமரையிருந்துதவம்பலநாளுழந்தாள். (அங)

சந்தநான்மறைசேர்வணமைச்சவுநகமுனிவகேண்மோ
சிந்தையிலுவந்துநாதன்றிருவெழுத்தஞ்சையுன்னி
யிந்தமாதவம்புரிந்தாங்கிறைவிதனிருப்பத்தக்கன்
வந்தவடனையெடுத்துவளர்த்திடுவளைசொல்வாம். (அச)

வேறு.

அற்றமில்சிறப்பினந்தவாழ்புனற்கணமூழ்குவான்
மற்றுநேரிலாதமாசிமாமகத்தினவண்மையால்
விற்புருவவேதவல்லியோடுமந்தவேலையி
லெற்குலாவுமெல்லைதோன்றுமெல்லையங்கணெய்தினன். ()

சார்ந்தவேதவல்லியோடுதண்புனற்கண்மூழ்கியே
கூர்ந்தவன்பினோடுதானைகூடியேகவேகுருப்
சேர்ந்ததாமனாக்கணந்திகழ்ந்தசங்கிலங்கலங்கண்
டார்ந்தவன்பினோடுதாசனங்கைகொள்ளவளினன். (அசு)

சிவனருட்டிகழ்ந்துவந்தசெல்விதன்னையெண்ணரும்
புவனமீன்றவம்மைதன்புதல்வியென்றுகைக்கொளா
வுவமையற்றவேதவல்லியுச்சிமோந்துறத்தழீஇ
யவணலத்தையன்பினுடியகமகிழ்ச்சிபொங்கினள். (அஎ)

பொங்கியேசுணங்கணிந்துபுடைபரந்தெழுந்துபொன
றங்குநற்கலன்சுமந்துசந்தனந்திமிர்ந்துநேர்
துங்கமேருவென்முலைசுரந்தபாலருந்தியே
மங்குல்வந்துறங்கிடுந்தன்மாளிகைக்கொடேகினள். (அஅ)

உம்பரோடுமுலகமெங்குமுற்றசேனைசுற்றவே
நம்புமாமணிக்கணங்கணண்ணுகோயின்மன்னியே
வம்புலாவுமதுரைகீதவண்டுகிண்டிமதுவுணு
மம்புயாசனத்தன்மைந்தனரசுசெய்திருந்தனன். (அகூ)

வேறு.

வந்தமனைபுகுந்ததற்பின்மறைக்கொடிதன்மார்படங்காச்
சுந்தரப்பொற்றுணைமுலைப்பால்சுரந்தளித்துநாட்குநா

ளுந்திபெருங்காதலினுலுலகீன்றவுத்தமியைச்
சந்திரன்போற்றிருமேனிநாள்வளரவளர்த்தனளால். (கூ0)

பக்கமுறுமோரன்னைப்பார்ப்பென்னப்பைங்கயன்சேர்த்
தக்கவருண்மிக்கமடவன்னந்தளர்நடைபயின்று
தொக்கவனமுருந்தெயிறுமொராய்யிடையைப்பாண்டகற்றி
மைக்கண்மயிலாருண்மைமனத்திலீசுமகிழ்நினைத்தாள். ()

மொழியொன்றுபுகல்வலிகமுநாருராமராதுகேண்மின்
செழுமலர்க்கொன்றையினதார்புகுமோனமுளிக்குஞ்சடாமௌலி
மழவிடையான்மணஞ்செய்யமாதவஞ்செய்குவனெனவோ
ரழகியநற்கடிமாடத்தருந்தவஞ்செய்தயர்ந்திருந்தாள், (கூ௨)

மங்கைகடிமாடத்தின்மன்னுமருந்தவம்புரியத்
துங்கமிகுமறைக்கொடிதான்றெழுதணைவன்முகநோக்கித்
திங்களுதற்பேதைதவஞ்செய்திறநீசெப்புகெனக்
கங்குறவழுங்கூந்தற்காரிகைக்குக்கட்டுரைப்பான். (கூ௩)

யான்முயன்றதவஞ்செயுநாளிந்தமடமயிலோடு
மான்மழுவேந்தியவெங்கோன்மழவிடைமேல்வந்தருளித்
தான்வரமிக்களித்தன்பின்சங்கரிசேயாய்நீயென்
பான்மருகனுகவரும்படியடியேற்கருளென்றேன். (கூ௪)

அன்னவரந்தந்தனமென்றரனருளவதனாலே
மன்னியவிம்மடக்கொடிநம்மகவாகவந்துதித்தாள்
பின்னருநம்மருகோனுய்ப்பிறைநுதலும்வந்தருள்வ
னென்னலுமின்பக்கடலிலேந்திழைவீழ்ந்தழுந்தினளால். ()

வேறு.

இன்னணமிறைவிமிக்கவிருந்தவம்புரியும்வேலை
பன்னிரண்டாண்டுநீங்கப்பராஞ்சுடர்பரசுபாணி
தன்னருளதனலத்தச்சங்கரிதவத்தைக்காண்பான்
மன்னியபிரமசாரியாகவோர்வடிவந்தாங்கி. (கூரு)

மடன்முறுக்குடைக்குஞ்செந்தேன்மாமலரயனுமாலு
மிடனுடன்றேடிக்காணுமெய்ப்பதங்கொப்பளிப்பப்

படிமிசைநடந்துதக்கன்பதியினிற்போந்துஞானக்
கொடியிடைதவக்கோட்டத்திற்குழகனல்லழகிற்சென்றான்.

பொம்மல்சேர்சேடியார்முன்புகன்றவட்புகுத்தலோடு
மிம்மெனவெதிர்சென்றேத்திவெழின்மணித்தவிசினேற்றிச்
செம்மலர்ப்பதத்திற்பூசைசெய்துமுன்வணங்கிநின்றாள்,
கொம்மைவெம்முலைக்கருங்கட்கோதின்ஞானப்பூங்கோதை.

நின்றவடன்னைநோக்கிநெற்றிவெண்ணீறுபூத்தோ
னென்றியால்விழைந்திங்குற்றேறென்னெண்டொடியதுநீசெய்யின்
மன்றவேயுரைப்பனென்னவாய்புதைத்தொதுங்கியஞ்சி
யென்றனக்கியைவதென்னினியம்புதியெந்தையென்ன. ()

சதுர்மறைபாடும்வாயான்றனுரைத்தருள்வானின்னைப்
புதுமணஞ்செய்யகிறபான்போந்தனனீண்டியானே
மதிதருதிருமுகத்தாய்மாற்றமொன்றியம்பவென்னக்
கதுமெனக்கன்னமூலங்காந்தளங்கைபுதைத்தாள். (க௦௦)

நெஞ்சகங்கனன்றுவல்லேநெட்டுயிர்ப்பெறிநதுசோர்ந்து
வஞ்சகவேடந்தாங்கிவந்தனையிறுமதித்தோ
வெஞ்சலிலிறைவன்வேண்டியின்பநன்மணஞ்செய்கிற்பான்
றஞ்சமாமவனைநோக்கித்தவமிகச்சார்ந்தேனென்றாள். (க௦க)

நாதனைநாடற்கெட்டாஞானநாயகனைநோக்கி
நீதவமுயல்வதென்னைநின்மலன்வந்துநின்னைக்
காதலின்வதுவைசெய்தல்கருதரிதால்வருந்தல்
பேதையேயென்றானென்றம்ப்ரமசாரியாயபெம்மான். ()

தன்னிகராகிநின்றதம்பிரான்வதுவைசெய்ய
மன்னுமாதவங்களின்னும்வருந்தியான்புரிவனந்த
நின்மலன்றானேவந்துநினைத்ததுமுடித்திடானே
லென்னுயிர்க்கீறுசெய்வேனென்றனளெம்பிராட்டி. (க௦௩)

நீங்குகவென்றுசீறிநீண்மணிமாடந்தன்னிற்
பாங்குறுபரிசனத்தோர்தம்முழைப்படர்தலோடும்
பூங்குழலுமையாள்காணப்பொருவருங்கருணைவள்ள
றீங்குறுத்தனதுபண்டைத்திருவுருத்தரிசிப்பித்தான். (க௦௪)

அருளுருவதனைக்காணூஉவம்பிகையுள்ளம்வெம்பி
வெருவிமென்முலைமுன்றிற்செல்வேற்கணீரிறைப்பக்காந்தட்
கரமலர்குவித்துநாயேன்கருதிடாதுரைத்தயாவும்
பொருவிடைப்பாகநீயேபொறுத்தருள்புரிதியென்றாள். ()

இப்பரிசியம்பலோடுமிறைவிமேல்வின்பிருத்தித்
துப்புறழ்சடிலத்தெந்தைதூய்மறைபாடும்வாயான்
மைப்படிநிலங்குமொண்கண்மடந்தைநீயஞ்சலென்னாச்
செப்பினன்மகிழ்விற்சூழ்ந்தசிலதியர்செவிநிறைப்ப. (சOசு)

தேங்கியவார்வமோங்குஞ்சிலதியர்சிலவரோடிப்
பாங்குறுதக்கன்றன்பாற்பான்மொழிபான்மைகூற
நீங்கருமயாதல்கூர்ந்துநின்மலனெனவ்வேநாடி
லாங்கவனறனக்கென்சேயையருமணம்புரிப்பலென்றான். ()

கொலைகெழுகூர்வேலுண்கட்குலவுகோமளக்கரும்பை, முலைமுகஞ்சிறந்தபொற்பூண்மொய்குழன்மூரறுவற் செவ்வாய்ச், சிலைநுதலாநுதல்சேர்மங்கைசிலதியர்சிலவர்சூழத், தலைவனைநாடியங்கட்டானினிதிருந்தாளன்றே. (கOஅ)

வேறு.

மைக்கருங்கணுமைமாதராண்மட்டறாங்கருணைகூரவே
தக்கபண்புரியின்மேவியேதக்கனன்பின்மகளானசீர்
மிக்கநன்கதையையோதுவோர்மெய்ச்சொலின்பயனைநாடுவோர்
முக்கணெந்தையருளாகியேமுத்திசென்றடைகுவார்களே. ()

உமாதேவி திருவவதாரச்சருக்க முற்றியது.

ஆகச் செய்யுள் கூசுஎ.

---

## பதினோராவது.

## உமாதேவிதிருவவதாரச் சருக்கச்சுருக்கவசனம்.



தக்ஷன், சத்தியவுலகஞ்சார்ந்து, பிரமாவையணுகி, "உயிர்க்குயிரா யிருக்கு முதற்கடவுள் யாவர்" என்று வினவ, அதற்குப் பிரமா யானும் விஷ்ணுவும் அன்னமும் பன்றியுமாய் முடிஅடிகளைத்தேடியும் உணரக்கூடாத சிவபிரானே பரம்பொருள்" என்று கூறினர்.

அதற்குத் தக்ஷன், "படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழில்களும் முறையே மூவர்களுக்கும் உரித்தாயிருக்க அம்மூவருள் ஒருவனை முதற்கடவுள்" என்று கூறுதல் பொருந்தாதென்றபோது, பிரமா "என்னையும் விஷ்ணுவையும் உண்டாக்கிப் பின்புஉலகத்தைப்படைக்கவும் காக்கவும் அதிகாரங்கொடுத்துப் பின்னர் எங்களையுலகத்தோடு அழித்துப் பின்பு வினைவசத்தால் உண்டாக்குவோர் அச்சிவபிரான், ஆதலால் அவரே முதற்கடவுள் அவரைவழிபட்டே உய்வாய் என்றும் அவரைநோக்கி மானதவாவியிலே தவஞ்செய்வாய் என்றும்" கூறினர். அங்ஙனமே மானதவாவியின்கரையின் தக்ஷன ஆயிரவருடம் தவஞ்செய்தான். அங்ஙனகுச் சிவபிரான எழுந்தருளியவுடன தக்ஷன் வணங்கி, சிவபிரானைநோக்கி "கருணையங்கடலே, உம்மை வணங்குவோர் அனைவரும் என்னைவணங்கவும், என்பணிசெய்யவும், உம்மைமாத்திரம் யான்பணியவும், இந்திரபதம் பிரமபதம் விஷ்ணுபதம் அசுரபதமுதலியவெல்லாம் என்னுடைய ஆணைவழி ஒழுகும்படி, நான் தலைவனாயிருக்கவும் எனக்குப் புதல்வர் புதல்வியர்களைகொடுத்து அவர் மரியாதிருக்கவும், உமாதேவி எனக்குப் புத்திரியாகவரவும் நீர் என்மாட்டு எழுந்தருளி அத்தேவியைத் திருமணம்புரியவும் வரமருளவேண்டும்" என்று பிரார்த்தித்தபோது, சிவபிரானும் பிரார்த்தித்தபடி வரமருளி மறைந்தருளினார். உடனே தக்ஷன மகிழ்ந்து, பிரமாவை அழைத்து, நிகழ்ந்தவைகளைச்சொல்லி ஒரு நகரம் அமைக்கும்படிகூற, அங்ஙனம் பிரமா "மகாபுரம்" என்னும் ஒருநகரம் சிருட்டித்தார். அதிலே தக்ஷன்வீற்றிருந்து அரசாட்சிசெய்து, வேதவல்லியைமணந்து ஆயிரம்புத்திரரைப்பெற்று, உலகத்தைப்படைக்கும் வலிமைபெறும்படி தவஞ்செய்ய அனுப்பினன். அப்புத்திரர் நாரதமுனிவர் உபதேசத்தால ஞானநிட்டைகூடி முத்திபெற்றனர். பின்னும் தக்ஷன் ஆயிரம்புதல்வரைப்பெற்று முனபோலத்தவஞ்செய்யும்படி அனுப்பவும், மீட்டும் நாரதமுனிவர் உபதேசத்தாலே அப்புத்திரர் திருவைந்தெழுத்தைச் சிந்தித்து நிட்டைகூடி முத்திபெற்றனர். பின்பு தக்ஷன் புத்திரிகளைப்பெற்று விவாகஞ்செய்து கொடுத்துப பௌத்திர பாக்கியத்தோடுவாழ்ந்து கொண்டிருந்தான். அக்காலையில், திருக்கைலாசத்திலே, சிவபிரானை உமாதேவியார் வணங்கி, உயிர்களுக்கு முத்தியருளுமுறையை அருளிச்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தபொழுது, சிவபிரான், "தேவதேவி நாம் உன்னை அதிஷ்டித்து நின்று பஞ்சகிருத்திய முகமாகப் பஞ்ச கிருத்தியங்களையும் உலகத்தில் நடாத்தி, இருவினைக்கீடாக உயிர்களுக்கும் போகங்களை யூட்டிப் பின்பு ஞானத்தைக்காட்டி முத்திகொடுப்போம். ஆனால் அப்

